تاميلي

# நமது நம்பிக்கை

(ஒரு ஷீயா அறிஞரின் விளக்கம்)

# இஃதிகாதுனா



ஆயத்துல்லாஹ் மகாரிம் ஷீராஸீ

## பதிப்புரை

இந்தியா, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் மற்றும் மியான்மார் போன்ற நாடுகளில் ஏராளமான தமிழ் பேசும் ஷீயாக்கள் வாழ்ந்து வருகிறார்கள். தமிழில் ஷீயாக்கள் பற்றிய நூல்கள் அரிதாக இருப்பது அவர்களுக்கும் அவர்களைப் பற்றி வாசித்தறிந்து கொள்ள விரும்பும் ஏனையோருக்கும் சங்கடத்தை ஏற்படுத்துகிறது.

கடந்த கால் நூற்றாண்டு காலத்துக்குள் மத்திய கிழக்கு நாடுகளில். குறிப்பாக ஈரானிலும் இராக்கிலும் நடந்த மாற்றங்கள் காரணமாக ஷீயா முஸ்லிம்கள் பற்றி தொடர்பு சாதனங்கள் பேசத் தொடங்கின. ஷீயாக்ள் பற்றிய தாறுமாறான எண்ணக் கருக்கள் உலக முஸ்லிம்களிடையே பரவ விடப்பட்டன.

இதனால் ஷீயாக்களின் நம்பிக்கைகள் மற்றும் செயற்பாடுகள் பற்றி ஆதாரபூர்வமாக விளக்கும் நூல்களின் தேவை நீண்ட காலமாகவே உணரப்பட்டு வந்தது. அப்பாரிய இடைவெளியை நிரப்புவதில் இச்சிறு நூல் பெரும் பங்கு வகிக்கும் என்பதில் நமக்கு நிறையவே நம்பிக்கையுண்டு.

இதனை யாத்த பேரறிஞர் ஆயத்துல்லாஹ் மகாரிம் ஷீராஸீ இன்றைய ஷீயா உலகில் கண்ணியத்தோடு நோக்கப்படுகின்ற பெரும் சிந்தனையாளர்களுள் ஒருவராவார். நூற்றுக் கணக்கான நூற்களை யாத்துள்ள அன்னாரின் 25 வால்யூம்கள் கொண்ட தப்ஸீர் அல் அம்ஸல் அண்மைக் காலத்தில் வெளியிடப்பட்ட தப்ஸீர்களில் தலைசிறந்த ஒன்றாகும். அவர், பிக்ஹ், உஸுல், ஹதீஸ், தத்ததுவ ஞானம், வரலாறு, அரசியல், மொழி எனப் பல்வேறு

துறைகளில் பாண்டித்தியம் மிக்கவர் ஆவார். அத்தகைய ஒருவர் ஷீயாக்கள் பற்றி விளக்குவதால் இது மிக்க ஆதாரபூர்வமானதும் நம்பத் தகுந்ததுமான தகவல்களையே கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இது இந்நூலின் முக்கிய சிறப்பம்சமாகும்.

உண்மையைத் தேடி அறிந்து கொள்ள விரும்புகின்ற அனைவருக்கும் இந்நூல் பயன் மிக்கதாக அமையும் என நம்புகின்றோம்.

**வெளியீட்டாளர்**

## நூலாசிரியரின் முன்னுரை

நமது நம்பிக்கை என்னும் நூல் ஷீஆ மத்ஹபின் அடிப்படைக் கொள்கைகளையும் அதனையொட்டிய பிரிவுகளையும் விபரிக்கும் நோக்கில் எழுதப்பட்டதாகும். இந்நூல் சகலரும் விளங்கிக் கொள்ளும் வகையில் மிக எளிய நடையில் எழுதப் பட்டுள்ளது. இதைப் படிப்பதன் மூலம் ஷீஆக்கள் பற்றியும் இறைவன், இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி, மலக்குமார், அல்குர்ஆன், மறுமை நாள் பற்றிய அவர்களது நம்பிக்கைகளையும் அறிந்து கொள்ள முடியும்.

அல்ஹம்து லில்லாஹ் இந்நூல் சர்வதேச இஸ்லாமிய கல்வி நிலையத்தால் தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்டு அம்மொழி பேசும் மக்களுக்கு தருவதையிட்டு பெருமிதம் அடைகின்றேன். இறைவன் எங்களையும் இதில் சம்பந்தப்பட்டவர்கள் அனைவரையும் நல்லடியார்களின் கூட்டத்தில் சேர்த்து மறுமையில் அஹ்லுல் பைத்தினர்களின் ஷபாஅத்தையும் பெற்றுத் தருவானாக.

**ஆயத்துல்லாஹ் மகாரிம் ஷீராஸீ**

**கும்,**
**ஈரான் இஸ்லாமியக் குடியரசு,**
***ஜூன், 2005.***

## உள்ளடக்கம்

அத்தியாயம் ஒன்று

# ஏகத்துவம்

## 1. இறைவன்

அனைத்துலகையும் படைத்தவன் அல்லாஹ் ஆவான். உலகிலுள்ள அனைத்துப் பொருட்களும் அல்லாஹ்வின் அறிவுக்கும் வல்லமைக்குமான சான்று களாக விளங்குகின்றன. மனிதனின் அகவய-புறவய அம்சங்கள், உயிரினங்கள், வித்துகள், புற்பூண்டுகள், நட்சத்திரங்கள் முதலிய அனைத்து அம்சங்களிலும் அல்லாஹ்வின் வல்லமையும் இருப்பும் ஊர்ஜித மாகின்றன. பிரபஞ்ச சிருஷ்டிகளின் ஆழ அகலங்கள் பற்றி அதிகமாக சிந்தனை செய்வதன் மூலமாக இறைவனது மகிமை, சக்தி, அறிவு நுட்பம் முதலா னவற்றை நன்கு புரிந்து கொள்ள முடியும்.

மனிதனது அறிவும் சிந்தனையும் அதிகரிக்கின்ற போது, அல்லாஹ்வினது அறிவு, நுட்பம் மற்றும் வல்லமை பற்றிய புதிய சான்றுகள் மனிதர்களுக்குக் கிடைக்கின்றன. சிந்தனை விருத்தியும் ஏற்படுகின்றது. இச்சிந்தனையே, மனிதர்கள் தினந்தோறும் அல்லாஹ்வை நேசிப்பதற்கு முக்கிய காரணமாக அமைவதுடன், அவனளவிலான நெருக்கத்திற்கு வழிவகுக்கும் சிறப்பம்ச மாகவும் அமைகின்றது.

அல்குர்ஆன் இவ்வாறு கூறுகின்றது:

"மு..மின்களுக்கு பூமியில் அத்தாட்சிகள் இருக்கி

ன்றன. உங்களுக்குள்ளேயும் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. அவைகளை நீங்கள் கவனித்துப் பார்க்க வேண்டாமா?" *(51:20,21)*

"நிச்சயமாக வானங்களையும் பூமியையும் படைத்திருப் பதிலும், இரவும் பகலும் மாறி மாறி வருவதிலும் அறிவுடையவர்களுக்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. அவர்கள் நின்ற நிலையிலும், இருந்த இருப்பிலும், தங்களின் விலாப்புறங்களின் மீது சாய்ந்த வண்ணமும் அல்லாஹ்வையே நினைத்து, வானங்கள் மற்றும் பூமியின் படைப்புகளைப் பற்றியும் சிந்தித்து, 'எங்கள் இரட்சகனே! நீ இவைகளை வீணாகப் படைத்து விடவில்லை' எனவும் கூறுவார்கள்."

*(3:190,191)*.

## 2. அவனது பண்புகள் (சிபத்துகள்)

அல்லாஹ், அனைத்து விதமான குறைபாடுகளை விட்டும் தூய்மையானவனாவான். அவன் பரிபூரண மானவன். உலகில் காணப்படும் எல்லாவிதமான சிறப்புகளும் பண்புகளும் அவனிடமிருந்தே உருவாகி யிருக்கின்றன.

"அல்லாஹ் எத்தகையவனென்றால், அவனைத் தவிர, வணக்கத்திற்குரிய வேறு நாயன் இல்லை. அவன் தான் உண்மையான பேரரசன். பரிசுத்தமானவன், சாந்தியளிப்பவன், அபயமளிப் பவன், கண்காணிப்பவன், யாவரையும் மிகைத்தவன், அடக்கியாளுபவன், பெரு மைக்குரியவன். அவர்கள் இணைவைப்பதை விட்டும் அல்லாஹ் மிகப் பரிசுத்தமானவன். அவன், அல்லாஹ், படைப்பவன். அவனே படைப்புகளை ஒழுங்குபடுத்தி உண்டாக்குபவன். அவனே படைப்பினங்களின் உருவ த்தை அமைப்பவன். அவனுக்கு அழகான பெயர்கள் இருக்கின்றன. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அனைத்தும் அவனையே துதி செய்கின்றன. அவனே யாவரையும்

மிகைத்தோனும் தீர்க்கமான அறிவுடையோ னுமாவான்." (59: 23,24)

### 3. அவன் முடிவில்லாதவன்

அல்லாஹ் சகல விடயங்களிலும் வரையறைக்கு உட்படாதவனாக இருக்கின்றான். அவனது அறிவு, சக்தி, வாழ்வு அனைத்துமே முடிவற்றவையாகும். இதன் காரணமாக இடம், காலம் போன்ற வரையறைகளுக்கு உட்படாத பண்புள்ளவனாக அல்லாஹ் இருக்கின்றான். ஏனெனில், இடம் காலம் எதுவாக இருப்பினும் அவற்றுக்கு வரையறை இருக்கின்றது. ஆனால், அல்லாஹ்வோ எல்லா காலதேச வர்த்தமானங்களை யும் கடந்தவனாகவும் அவற்றை மிகைத்தவ னாகவும் இருக்கின்றான்.

> "வானத்திலும் அவனே வணக்கத்திற்குரிய நாயன். பூமி யிலும் அவனே வணக்கத்திற்குரிய நாயன். அவனே தீர்க்கமான அறிவுடையவன், யாவற்றை யும் மிகைத் தவன்." (43:84)
> "நீங்கள் எங்கிருந்த போதிலும் அவன் உங்களுடன் இருக்கின்றான். மேலும், அல்லாஹ் நீங்கள் செய்ப வற்றை நன்கு பார்க்கின்றவன்." (57:04)

வாஸ்தவத்தில் இறைவன் நமக்கு நம்மை விடவும் மிக நெருக்கமாக இருக்கின்றான். அனைத்து இடங்களிலும் அவன் வியயாபித்து இருக்கின்றான். ஆனால், எந்நிலை யிலும் அவனுக்கென்று பிரத்தியேக இடமொன்று கிடையாது.

> "மேலும், நாம் உயிர் நரம்பை விட அவனுக்கு மிக சமீபமாக இருக்கின்றோம்." (50:16)
> "முதலாமவனும் கடைசியானவனும் அவனே. அந்தரங்க மானவனும், வெளிப்படையானவனும் அவனே. மேலும் அவன் ஒவ்வொரு பொருளை யும் நன்கறிபவன்." (57:03)

குர்ஆனின் சில வசனங்களில், "அவன் அர்ஷ்"டையவ ன், பெரும் கீர்த்தியுடையவன்." "ரஹ்மான் அர்ஷின்

மீது நிலைகொண்டான்" முதலான கருத்துகள் தொனிக்கின்றன. அரபு மொழியில் *அர்ஷ்* எனும் பதம் சிம்மாசனத்தைக் குறிக்கவும் பயன்படுகின்றது. ஆயினும், இவ்வசனங்கள் அல்லாஹ்வுக்கு ஒரு பிரத்தியேக இடத்தை அடையாளப் படுத்துவதாகவோ, ஒரு சிம்மாசனத்தை அவனுக்கான இருப்பிடமாக இனங்காட்டுவ தாகவோ இல்லை. முழுப் பிரபஞ்சத்தின் மீதும் அதற்கு அப்பாற் பட்ட ஆத்மீக உலகங்கள் மீதும் வியாபித்திருக்கும் இறையாட்சியையே அவை குறிக்கின்றன. ஏனெனில், அல்லாஹ்வுக்கு இடம் உண்டென்று கூறும்போது, அவனும் வரையறைக்கு உட்பட்டவனாக மாறிவிடும் நிலை ஏற்படுகின்றது. இடம் எனும் வரையறைக்குள் குறுகி விடுவது படைப்பினங் களின் பண்பாகும். படைப்பாளனோ படைப்பினங்களை ஒத்தவனாக இல்லை.

அதேவேளை, "அவனைப் போன்று ஒன்று மில்லை" *(42:11)*, "அவனுக்கு நிகராக ஒன்றுமில்லை"*(112:4)* போன்ற வசனங்கள், அல்லாஹ் வின் ஒப்புவமையற்ற உயர் நிலையை சுட்டுவனவாக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

## 4. அவன் உருவமற்றவன்

அல்லாஹ்வை கண்களால் காண முடியாது என்பது எமது நம்பிக்கையாகும். ஏனெனில், ஒரு பொருளை கண்களால் காண முடியுமாக இருப்ப தென்பது, குறித்த பொருளுக்கு உருவம், இடம், நிறம், தோற்றம், திசை முதலான பண்புகளை அடையாளப் படுத்தும் சான்றாக அமைகின்றது. இவை சிருஷ்டிகளின் பண்புகளாகும். ஆனால் படைப்பாளனாகிய அல்லாஹ்வின் பண்பு களோ, அவனது படைப்புகளின் பண்புகளை விட்டும் முற்றிலும் வேறுபட்டனவும் தெய்வீகத் தன்மை வாய்ந்தனவுமாகும்.

இதன்படி, அல்லாஹ்வைக் கண்களால் காண முடியும் என்று நம்புதலானது இணைவைப்பில் (ஷிர்க்) எம்மைச் சேர்த்து விடும் அபாயம் கொண்டது.

> "பார்வைகள் அவனை அடையாது. அவனே பார்வைகளை அடைகின்றான். அவன் நுட்பமா

னவன். யாவற்றையும் நன்கறிந்தவன்."
(06:103)

பனூ இஸ்ராயீல்களில் சிலர் நபி மூஸாவிடம் வந்து, "மூஸாவே! நாம் இறைவனைக் கண்ணால் காண்கின்ற வரை, உம்மை விசுவாசங் கொள்ள மாட்டோம்"(2:55) என்று தர்க்கம் புரிந்தார்கள். மூஸா நபியவர்கள் அக்குழுவினரை அழைத்துக் கொண்டு தூர்சீனா மலைக்குச் சென்று அவர்களது வேண்டுகோள் பற்றி அல்லாஹ்விடம் எடுத்துரைத்தார்கள். அப்போது அல்லாஹ்விடமிருந்து பதில் வந்தது:

"மூஸாவே! ஒரு போதும் நீர் என்னைப் பார்க்க முடியாது. எனினும் இம்மலையை நீர் பார்ப்பீராக. அது தன்னுடைய இடத்தில் நிலைத்திருந்தால் அப்போது நீர் என்னைப் பார்ப்பீர்."
"அதன்படி அவர்களது இரட்சகன் அம்மலை மீது வெளிப்பட்ட போது, அது அம்மலையை தூள்தூளாக்கி விட்டது. மூஸாவும திடுக்கிட்டு மூர்ச்சையாகி விழுந்து விட்டார். பின்னர், அவர் தெளிவுபெற்று எழுந்த போது, அல்லாஹ்விடம் 'நீ மிகப் பரிசுத்தமானவன். நான் உன்னிடம் பாவ மன்னிப்புக் கோருகின்றேன். இன்னும் நான் மு.'.மின் களில் முதன்மையானவன்' என்றும் கூறினார்." (07:143-9)

அல்குர்ஆன் பிரஸ்தாபிக்கின்ற இவ்வரலாற்று நிகழ்வு, மனிதர்கள் அல்லாஹ்வைக் காண்பதென்பது சாத்தியமற்றது என்பதற்கு சிறந்த சான்றாகும். சில அல்குர்ஆன் வசனங்களி லும், ஹதீஸ்களிலும் அல்லாஹ்வைக் காண முடியும் என்ற கருத்தை தொனிக்கும் கூற்றுகள் காணப்படினும், அவை அகக் கண்களால் அல்லாஹ்வை அடைய முடியும் என்பதையே சுட்டுவதாக அமைந்துள்ளன என்பது தெளிவு. ஏனெனில், குர்ஆன் வசனங்கள் எப்போதும் ஒன்றையொன்று முரண்பட்டு நிற்பதில்லை. மாறாக ஒன்றை மற்றொன்று விளக்குவதாகவே அமைகின்றது

ஹஸ்ரத் அலீ அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் பார்த்து ஒரு மனிதர், "அமீருல் மு.்.மினீனே! எப்போதாவது தங்களது இறைவனைக் கண்டதுண்டா?" என வினவியபோது, "காணாத ஒருவனை வணங்குவேனா?" எனக் கூறிவிட்டுச் சொன்னார்கள்: "ஒருபோதும் கண்கள் அவனை வெளியோட்டமாக காணமாட்டாது. ஆனால், உள்ளங்கள், ஈமானின் யதார்த்தத் தன்மையால் அவனைக் கண்டுகொள் கின்றன." *(நஹ்ஜுல் பலாகா - குத்பா - 179)*

மனிதர்களின் பண்புகளை அல்லாஹ்வில் கற்பனை செய்வதும் இடம், காலம், திசை, உருவம் போன்றவற்றை அல்லாஹ்வுடைய இயல்புகளென நம்புவதும் அல்லாஹ்வை அறிவதிலிருந்து தூரமாவதற்கும் ஷிர்க்கினால் அழுக்காவதற் கும் காரணமாக அமைந்து விடுகின்றன. எனவே, அல்லாஹ் மனிதர்களுடைய பண்புகளை விட உயர்ந்தவனும் பரிசுத்தமானவனும் மட்டுமன்றி தன் சகல விடயங்க ளிலும் ஒப்புவமை யற்றவனாகவும் இருக்கி ன்றான்.

## 5. தவ்ஹீத்: இஸ்லாத்தின் ஜீவநாடி

தவ்ஹீத் எனும் ஏகத்துவம் பற்றிய அறிவு, அல்லாஹ்வை அறிந்து கொள்ளும் விடயத்தில் மிக முக்கிய மான அம்சமாகும். தவ்ஹீத், மார்க்கத்தின் அடிப்படைகளில் ஒன்று எனக் கருதுவதை விட அதுவே அனைத்து மார்க்கக் கோட்பாடுகளினதும் மூல உயிராக இருக்கின்றது என்றால் மிகையாகாது.

இஸ்லாமிய அடிப்படைகளும் அதனையொட்டிய பிரிவுகளும் தவ்ஹீதிலிருந்து தான் தோற்றம் பெறுகின்றன. அல்லாஹ் ஒருவன், நபிமார்களின் அழைப்பு (த.்.வா) ஒன்று, இறைமார்க்கம் ஒன்று, கிப்லா ஒன்று, இறைவேதம் ஒன்று, அனைத்து மனிதர்களுக்கும் அல்லாஹ்வின் சட்டதிட்டங்கள் ஒன்று, முஸ்லிம்களின் அணி ஒன்று, இறுதியில் மீளும் மறுமை நாளும் ஒன்றே என இந்த ஒருமை எங்கும் விரவிக் காணப்படுகின்றது.

இதனாலேயே, ஏகத்துவத்திலிருந்து ஷிர்க்கை நோக்கிச் செல்வதை மன்னிக்க முடியாத பாவமென இஸ்லாம் கருதுகின்றது.

> "நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணை வைக்கப்படுவதை மன்னிக்கவே மாட்டான். இதனைத் தவிர மற்ற எதனையும் தான் நாடியோருக்கு மன்னிப்பான். எவர் அல்லாஹ் வுக்கு இணை வைக்கின்றாரோ, அவர் திட்டமாக மகத்தான பாவத்தை பொய்யாக கற்பனை செய்து விட்டார்." *(04:48)*
>
> "நீர் இணை வைத்தால், நிச்சயமாக உமது செயல்கள் யாவும் அழிந்து விடும். நிச்சயமாக, நீர் நஷ்ட வாளிகளில் ஆகிவிடுவீரென உமக்கும், உமக்கு முன்னிருந்தவர் களுக்கும் வஹீ மூலம் அறிவிக்கப ்பட்டது." *(39: 65)*

## 6. ஏகத்துவத்தின் வகைகள்

எமது நம்பிக்கைகளின் பிரகாரம், ஏகத்துவம், பல கிளைகளைக் கொண்டதாகும். அவற்றில் பின்வருவன முக்கியமானவையாகும்.

### அ. தவ்ஹீத் தாத்

இறைவன் தனித்தவன். அவனுக்கு இணையா கவோ, நிகராகவோ எதுவும் கிடையாத மூலவன் என்று நம்பிக்கை கொள்வது.

### ஆ. தவ்ஹீத் சிபாத் (பண்புகள்)

அறிவு, சக்தி, வல்லமை, நிரந்தரம் முதலிய பண்புகள் அனைத்தும் அல்லாஹ்வினது தாத் எனப்படும் மூலவியல்பில் உள்ளவையாகும். மேலும் அவனது பண்புகள் படைப்பினங்களின் பண்புகளைப் போன்று காணப்படுவதில்லை. ஏனெனில், படைப்பினங்களுடைய பண்புகள் ஒவ்வொன்றும் அவற்றின் அடிப்படை மூலத்தில் இருந்து வேறுபட்ட இயல்பும் பல்லினத் தன்மையும் கொண்டவையாகும். அல்லாஹ்வின் பண்புகள் அவனது தாத்தில் உள்ளவை என்பதைப்

புரிந்து கொள்வதற்கு ஆழ்ந்த சிந்தனை தேவைப் படுகின்றது.

**இ. தவ்ஹீத் அ.்.ப்ஆல் (செயல்கள்)**

அல்லாஹ்வின் நாட்டத்திலிருந்தே உலகின் ஒவ்வொரு அசைவும், செயலும் உருவாகின்றது.

> "அல்லாஹ்வே ஒவ்வொரு பொருளையும் படைக்கிறவன். அவனே ஒவ்வொரு பொருளின் மீது பொறுப் பாளன்." (39: 62)
> "வானங்கள் மற்றும் பூமியினது (பொக்கிஷங்களின்) சாவிகள் அவனுக்கே உரியவையாகும்." (42: 12)

எனவே தான், "அல்லாஹ்வைத் தவிர, பிரபஞ்ச வெளிப்பாடுகளில் தாக்கமேற்படுத்தும் எந்தவொரு காரணியும் கிடையாது" என்று கூறப்படுகின்றது. இதனை வைத்து, மனிதர்கள் தமது செயற்பாடுகளில் சுதந்திரமற்றவர்கள் என்று பொருள் கொள்ளப்படக் கூடாது. மாறாக, மனிதர்கள் தாமாகவே தீர்மானித்து செயற்படுவதில் சுதந்திரமானவர்களாக இருக்கின்றனர்.

> "நிச்சயமாக, நாம் மனிதர்களுக்கு நேர்வழியைக் காட்டியுள்ளோம். அதைப் பின்பற்றி அவன் ஒன்று- நன்றியுள்ளவனாக இருக்கலாம். அல்லது அதைப் பின்பற்றாது நன்றி மறந்தவனாக இருக்கலாம்." (76: 03)
> "மனிதனுக்கு அவனாகவே முயற்சி செய்வதைத் தவிர வேறொன்றுமில்லை." (53: 39)

இவ்வசனங்கள் மனிதன் சுதந்திரமான நாட்ட முடையவன் என்பதை மிகத் தெளிவாக சுட்டிக் காட்டு கின்றன. ஆனால், குறித்த செயலை செய்வதற்கான சக்தியையும் சுதந்திர நாட்டத்தையும் அல்லாஹ்வே மனிதர்களுக்கு வழங்குகின்றான். அந்த விதத்தில் மனிதர்கள் அல்லாஹ்வோடு தொடர்பு படுகின்ற போதிலும், மனிதர்களது செயல்கள் பற்றிய அவர்களது பொறுப்பு அதன் மூலம் குறைந்து விடுவதில்லை.

உண்மையில் மனிதர்கள் தமது செயற்பாடுகளை

சுதந்திரமாக மேற்கொள்வதற்கு அல்லாஹ் நாடியுள்ளான். அதன் மூலம், அவன் மனிதர்களைப் பரிசோதிக்கின்றான். அத்துடன் பரிபூரணத்துக்கும் இட்டுச் செல்கின்றான். ஏனெனில் தீர்மானிக்கும் சுதந்திரம் மற்றும் அல்லாஹ்வை அடிபணிவதற்கு சுயவிருப்பத்தின் படி முன்வருதல் என்பவற்றின் மூலமே மனிதர்களது பரிபூரணத் தன்மை ஊற்றெடுக்கின்றது. ஏனெனில், சுதந்திரமற்ற நிலையில் விதிக்கப்பட்ட செயல்கள், மனிதர்களுடைய நல்ல அல்லது கெட்ட பண்புகளை பிரதிபலிப்பனவாக இருக்க முடியாது.

மனிதர்கள் தமது செயல்களில் சுதந்திர மற்றவர்களாகக் காணப்படுவார் களாயின், நபிமார்களின் வருகைக்கோ இறைவேதங்கள், மார்க்க அழைப்புகள், அதன் வழிகாட்டல்கள் என்பவற்றுக்கோ எவ்வித அர்த்தமும் இருந்திருக்காது. அதேபோல நன்மை, தீமைகளுக்கு அல்லாஹ்வே கூலி வழங்குவதும் கூட அர்த்தமற்றதாகவே அமைந்திருக்கும்.

இதே விடயங்களைத் தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுடைய அஹ்லுல் பைத்தினரி லிருந்து தோன்றிய பரிசுத்த இமாம்களிடமி ருந்தும் கற்றுக் கொள்ள முடிகின்றது. அவர்களது கூற்றின் பிரகாரம்:

> "முழுக்க விதியை நம்புவதோ, அல்லது பரிபூரண சுதந்திரமோ சரியானதன்று. உண்மை, அவ்விரண்டு க்கும் மத்திமமானதாகும்."

**ஈ. தவ்ஹீத் இபாதத் (வணக்க வழிபாடுகளில் தவ்ஹீத்)**

இபாதத் எனப்படும் வணக்க வழிபாடு அல்லாஹ்வுக்கு மட்டுமே நிறைவேற்றப்பட வேண்டியதாகும். அவனைத் தவிர, வணங்கி வழிபடத் தகுதியான நாயன் யாருமில்லை. இது, ஏகத்துவத்தின் அதி முக்கிய அம்சமாகும். நபிமார்களும் விசேடமாக இதன் முக்கியத்துவத்தை வலியுறுத்தியுள்ளார்கள்.

> "அவர்கள் இறைவனை மாத்திரமே வணங்க வேண்டும், அவனுக்காக மார்க்கத்தை தூய்மைப் படுத்த வேண்டும், இணை வைப்பதிலிருந்து

> ஏகத்துவத்தின் பால் திரும்ப வேண்டும், தொழுகைகையும் கடைப் பிடித்து ஸக்காத்தும் கொடுத்து வர வேண்டும் என்ப தைத் தவிர அவர்களுக்கு வேறெதுவும் ஏவப்பட வில்லை. இன்னும் இது தான் நேரான மார்க்கமாகும்."
> *(98: 05)*

ஆத்ம ஞானம் (இர்பான்), ஒழுக்கவியல் (அக்லாக்) போன்ற துறைகளில் உச்சநிலை அடைவதற்கான படிகளைத் தாண்டுவதற்கு, கண்டிப்பாக தவ்ஹீத் மிக ஆழமாகப் பேணப் படல் வேண்டும். அல்லாஹ்வைத் தவிர வேறெதனையும் அன்பு கொள்ளாத, எல்லா இடங்களிலும் அவனை மட்டுமே வேண்டுகின்ற, அவனைத் தவிர வேறெதனைப் பற்றியும் சிந்திக்காத, அல்லாஹ்வுக்காகவன்றி வேறெதற்காகவும் செயற் படாத தன்மை ஆகியன இதில் அடங்கும். இதனைத்தான்: "உன்னை ஈர்த்தெடுக்கும் அல்லாஹ் அல்லாத எதுவும் நீ வணங்கும் சிலையாகக் கருதப்படுகின்றது" என்று கூறுவதுண்டு.

நமது நம்பிக்கையின் படி, தவ்ஹீத் என்பது, இந்நான்கு கிளைகளுடன் மட்டும் மட்டுப்படுத்தப்பட்ட ஒன்றல்ல. பின்வருவனவும் அதில் அடங்குகின்றன.

**உ. தவ்ஹீத் மாலிகிய்யத்**

அதாவது எல்லா சிருஷ்டிகளும் அல்லாஹ்வுக்குச் சொந்தமானவை என்று நம்புவது.

> "வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அனைத்தும் அல்லாஹ்வுக்கு உரியவையாகும்."
> *(02:284)*

**ஊ. தவ்ஹீத் ஹாகிமிய்யத்**

அதாவது சட்டவாக்க அதிகாரம் அல்லாஹ்வுக்கு மட்டும் உரியதாகும் என்பது.

> "மேலும், எவர் அல்லாஹ் இறக்கி வைத்ததைக் கொண்டு தீர்ப்பளிக்க வில்லையோ, அத்தகை யோர் தாம் காபிர்கள்." *(05: 44)*

### 7. அற்புதங்கள்

நபிமார்கள் செய்யும் வழமைக்கு மாறான பிரமாண் டமான செயல்களனைத்தும் அல்லாஹ்வின் அனுமதியின் பிரகாரமே இடம்பெறுகின்றன என்பதை செயல்கள் (அ.ஃப்ஆல்) பற்றிய ஏகத்துவம் உறுதிப்படுத்துகின்றது. அல்குர்ஆன் நபி ஈஸா அலைஹிஸ் ஸலாம் பற்றி இவ்வாறு குறிப்பிடுகின்றது:

> "எனது உத்தரவைக் கொண்டு வெண்குஷ்டம் மற்றும் கருங்குஷ்டத்தைச் சுகப்படுத்தியதையும் மரணித்தோரை எழுப்பியதையும் நினைவு கூர்வீராக." *(05:110)*

மேலும் நபி சுலைமான் (அலை) அவர்களுடைய அமைச்சர்களில் ஒருவரைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

> "வேதத்திலிருந்து அறிவை தன்னிடம் கொண்டிருந்த வரான ஒருவர், கண் இமைப்பதற்குள் அதனை நான் உம்மிடம் கொண்டு வந்து விடுவேன் என்று கூறினார். அது தன் முன் நிலைபெற்றிருப்பதை அவர் (சுலைமான்) கண்ட போது, இது எனது இரட்சகனின் பேரருளில் உள்ளதாகும் எனக் கூறினார்." *(27:40)*

எனவே, குணப்படுத்த முடியாத நோய்களைக் குணப்படுத்தியதும் மரணித்தவர்களை உயிர்ப்பித்ததும் ஈஸா நபியவர்களுடன் தொடர்புபடுத்திக் கூறப்பட்டாலும் உண்மை யில் அவை அல்லாஹ்வின் உத்தரவின் பிரகாரமே நிகழ்ந் தவையாகும். மேற்போந்தவற்றின் மீதான நம்பிக்கை ஏகத்து வத்தின் அடிப்படை களுக்கு முரணானது அல்ல என்பது எமது நம்பிக்கையாகும்.

### 8. மலக்குகள்

மலக்குகள் பற்றியும், அவர்களது பிரத்தியேகக் கடமைகள் பற்றியுமான விசுவாசம், மார்க்க நம்பிக்கையில் முக்கியமான ஒன்றாகும். மலக்குகளில் சிலர், நபிமார்களுக்கு வஹி அறிவிப்பாளர்களாக

இருந்தார்கள்.(1:97) மற்றும் சிலர், மனிதர்களின் செயல்களைப் பாதுகாக்கும் பொறுப்பையும் (82:10) மேலும் சிலர், உயிர்களைக் கைப்பற்றும் பொறுப்பை யும் (7:37) வேறு சிலர், வரம்பு மீறுவோருக்கு தண்டனை கொடுக்கும் பொறுப்பையும் (11:77) கொண்டிருந்த அதேவேளை, இன்னும் சிலர், மு.்.மின் களுக்கு நன்மையான வைகளில் நிலைத்திருப் பதற்கு உதவி செய்வோர்களாகவும் (41:30), யுத்தத்தில் மு.்.மின்களுக்கு ஒத்தாசை புரிவோர்களாகவும் (33:9) இருக்கின்றனர். இவை தவிர பிரபஞ்ச அமைப்பில் வேறு பல பொறுப்புகளையும் மலக்குகள் கொண்டுள் ளனர்.

இத்தனை பொறுப்புகளும் பணிகளும் அல்லாஹ்வின் கட்டளையின் பிரகாரமே அமைந்துள் ளமையினால் அ.்.ப்ஆல் மற்றும் ருபூபிய்யத் ஆகிய தவ்ஹீதின் அடிப்படைகளோடு இவை எவ்விதத்திலும் முரண்படு வதில்லை. அத்தோடு, அல்லாஹ்வின் அனுமதியின் பிரகாரம் நபிமார்கள், ம.்.சூம்கள், மலக்குகள் ஆகியோர் செய்யும் ஷபாஅத்தும் தவ்ஹீதுடன் எவ்வித த்திலும் முரண்பட்டதல்ல என்பது இவ்விடத்தில் நன்கு தெளிவாகின்றது.

> "அல்லாஹ்வின் அனுமதியின் பிரகாரமன்றி ஷபாஅத்துச் செய்வோர் எவருமில்லை." (10:03)

## 9. இபாதத் இறைவனுக்கு மட்டுமே

எமது நம்பிக்கையின் பிரகாரம் வணங்கி வழிபடத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரு மில்லை. இது பற்றி இபாதத் விடயத்திலான ஏகத்துவம் பற்றிய விளக்கத்தில் குறிப்பிட்டோம். ஆக, அல்லாஹ் அல்லாத எதையும் எவரையும் வணங்கி லழிபடுவது ஷிர்க் ஆகும்.

> "நீங்கள் அல்லாஹ்வை வணங்குங்கள் அவனைத் தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை." (07:59,65,73,85)

எனும் வசனம், நபிமார்கள் பலர் கூறியதாக

அல்குர்ஆனின் பல இடங்களில் பிரஸ்தாபிக்கப் பட்டுள்ளது.

முஸ்லிம்கள் தினந்தோறும் தமது தொழுகையில் சூரா பாத்திஹாவை ஓதுகின்றனர். அதில்,

> "உன்னையே வணங்குகின்றோம், உன்னிடமே உதவியும் தேடுகின்றோம்."

என்ற இஸ்லாத்தின் முக்கிய மூல மந்திரத்தை பல தடவை தமது நாவினால் எடுத்துரைத்து, அதன் மீதான தமது நம்பிக்கையை பலப்படுத்திக் கொள்கின்றனர்.

எனவே, அல்குர்ஆனில் குறிப்பிடப்பட்டிருக்கும், அல்லாஹ்வின் அனுமதியுடன் நபிமார்கள், மலக்குகள் செய்யும் ஷபாஅத்தைப் பற்றிய நம்பிக்கை, வணங்குதல் எனும் பொருளைத் தருவதில்லை என்பது தெளிவாகிறது.

மேலும், குறித்த ஒரு தேவைக்காக நபிமார்களின் மூலமாக வஸீலா தேடுவதும் வணக்கமென்று கணிக் கப்பட முடியாது. இது, செயல்கள் மற்றும் வணக்கம் பற்றிய தவ்ஹீதுடன் எவ்விதத்திலும் முரண்பட்டதன்று என்பது எமது நம்பிக்கையாகும்.

அத்தியாயம் 2

# நபித்துவம்

## 1. நுபுவ்வத்தின் நோக்கம்

மனிதர்களை நேர்வழிப்படுத்துவதற்காகவும் அவர்களை பரிபூரணத்தின் பால் வழிகாட்டு வதற்குமாகவும் நபிமார்களையும் றஸூல்மார்களையும் இறைவன் இவவுலகுக்கு அனுப்பி வைத்தான். நபிமார்கள் அனுப்பப்பட்டிருக்கவில்லையெனில், மனிதப் படைப்பின் நோக்கம் தெளிவற்றதாகப் போயிருப்ப தோடு, மனிதர்களும் வழிகேட்டில் மூழ்கும் நிலை தோன்றியி ருக்கும்.

> "அல்லாஹ்வின் மீது மனிதர்களுக்கு சாதகமாக யாதொரு ஆதாரமும் இல்லாதிருப்பதற்காக, தூதர்கள் பலரை நன்மாராயம் கூறுபவர்க ளாகவும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களா கவும் அவன் அனுப்பி வைத்தான். மேலும், அல்லாஹ் யாவரையும் மிகைத்தோனும் தீர்க்கமான அறிவுடையோனுமாவான்." (04:165)

உலகுக்கு வந்த நபிமார்களுள் ஐந்து போர் *உலுல்அஸ்ம்* என நாம் நம்புகின்றோம். அவர்கள் புதிய வேதம், புதிய சட்டதிட்டங்களைக் கொண்டு வந்தவர்கள் ஆவர். அவர்களில் முதன்மையானவர் ஹஸ்ரத் நூஹ் (அலை) ஆவார். ஏனையோர், நபி இப்ராஹீம் (அலை), நபி மூஸா (அலை), நபி ஈஸா (அலை) ஆகியோரோடு

இறுதித் தூதர் நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களும் ஆவர்.

> "மேலும் நபிமார்களிடமிருந்தும், உம்மிடமிருந்தும் நூஹ், இப்ராஹீம், மூஸா, மர்யமின் மகன் ஈஸா ஆகியோரிடம் இருந்தும் அவர்களின் உறுதி மொழியை எடுத்த சமயத்தில், அவர்களிடமிருந்து மிக்க உறுதியான உறுதி மொழியையே நாம் எடுத்தோம் என்பதனை நினைவு கூறுவீராக."
> (33: 07)

> "(நபியே!) ரசூல்மார்களில் உலுல்அஸ்ம்கள் பொறுமை கொண்டிருந்தது போல் நீரும் பொறுமை கொண்டிருப்பீராக." *(46:35)*

பெருமானார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் உலகிற்கு வந்த இறைத்தூதர்களில் இறுதியானவர் என்றும் அவர்கள் உலகிற்கு அறிமுகப்படுத்திய இஸ்லாம் மார்க்கம், அனைத்து உலகத்தாருக்கும் அனைத்து காலப் பகுதிக்கும் ஏற்ற இறுதி நாள்வரை நடைமுறைப் படுத்தப்படக் கூடிய மார்க்கமாகும் என்றும் நாம் நம்புகின்றோம். இஸ்லாம் மனிதர்களது அன்றாட மற்றும் அவர்களது ஆன்மீக-இலௌகீக வாழ்வுத் தேவைக ளையும், படைப்பின் குறிக்கோளையும் பூர்த்தி செய்யத் தக்க அறிவு, சட்டதிட்டங்கள் அனைத்தையும் அவர்களுக்கு வழங்குகிறது. எனவே, பெருமானாருக்குப் பின்னர், புதிதாக நபித்துவம் அல்லது புதிய வேதம் பெற்றிருப்பதாகக் கூறுவதும் அதனை நம்புவதும் முற்றிலும் பொய்யான, நிராகரிக்கப்பட வேண்டிய விசயமாகும்.

> "உங்களுடைய ஆண்களில் எவருக்கும் முஹம்மத் தகப்பனாக இருக்கவில்லை. எனினும், அல்லாஹ்வுடைய தூதராகவும், நபிமார்களில் இறுதியானவராகவும் இருக்கின்றார். மேலும், அல்லாஹ் ஒவ்வொரு பொருளைப் பற்றியும் நன்கறிந்தவனாக இருக்கின்றான்." *(33: 40)*

### 2. ஏனைய மதத்தவருடன் நல்லுறவு

இஸ்லாம் மட்டுமே அல்லாஹ்வினால் அங்கீகரிக்கப் பட்ட மார்க்கமாகும் என்று நம்பிக்கை கொள்வ துடன் ஏனைய இறைவேதங்களைப் பின்பற்றக் கூடியவர்க ளுடன் ஒற்றுமையாகவும் புரிந்துணர்வுடனும் நடந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். இஸ்லாத்திற்கும் முஸ்லிம்களுக்கும் எதிராக அத்தகையோர் செயற்படா தவரை, அவர்களுடன் சுமுகமான நல்லுறவைப் பேணுவது அவசியமாகும்.

> "மார்க்க விடயத்தில் உங்களுடன் எதிர்த்துப் போரிடாமலும், உங்கள் இல்லங்களிலிருந்து உங்களை வெளியேற்றாமலும் இருந்தவர்களுக்கு நீங்கள் நன்மை செய்வதை யும் அவர்கள் பால் நீங்கள் நீதமாக நடந்து கொள்வதையும் அல்லாஹ் உங்களுக்குத் தடுக்க வில்லை. நிச்சயமாக அல்லாஹ் நீதமாக நடப்பவர் களை விரும்புகின்றான்." *(60:08)*

இஸ்லாம், அற்புதமும் பரிபூரணத்துவமும் மிக்க மார்க்கமாகும். அறிவுபூர்வமான சிறந்த தர்க்க ரீதியான ஆய்வுகள் மூலமாக அதன் யதார்த்தத்தை அனைத்து மக்களுக்கும் தெளிவுபடுத்த முடியும். உரிய அணுகுமுறையில் தெளிவுபடுத்தப் படும் போது, இஸ்லாத்தின் பாலான ஈர்ப்பும், விருப்பும் மேலும் அதிகரிக்கும் என்பது உறுதி. மேலும், இஸ்லாத்தின் தூதினைச் செவிமடுக்கத் தயாராகவுள்ள இன்றைய உலகு அதனை வரவேற்றுப் போற்றும்.

அதே வேளை, இஸ்லாம் இயல்பாகவும் சுதந்திரமாகவும் பின்பற்றப்பட வேண்டும். பலாத்காரத் துக்கோ வற்புறுத்தல்களுக்கோ இங்கு இடமில்லை. அல் குர்ஆன் இது பற்றி இவ்வாறு கூறுகின்றது:

> "மார்க்கத்தில் எத்தகைய நிர்ப்பந்தமும் கிடையாது. ஏனெனில், வழிகேட்டில் இருந்து நேர்வழி தெளிவாகி விட்டது." *(02:256)*

இஸ்லாம் கூறும் சட்டதிட்டங்களை முஸ்லிம்கள் பூரணமாக தமது அன்றாட வாழ்வில் நடைமுறைப்

படுத்தும் போது, அது இஸ்லாத்தின் மீதான பிறரின் நல்லெண்ணத்துக்கும் புரிந்துணர்வுக்கும் வழிவகுக்கின்றது. அவ்வாறிருக்க மார்க்கத்தை யார் மீதும் நிர்ப்பந்தமாகத் திணிக்கும் அவசியம் ஏற்படுவதில்லை.

### 3. நபிமார்கள் ம.்.ஸூம்களாவர்

நபிமார்கள் அனைவரும் தமது வாழ்நாள் முழுவதிலும் - நுபுவ்வத்துக்கு முன்னரும் சரி, பின்னரும் சரி- பாவச் செயல், மறதி, தவறுகளை விட்டும் பரிசுத்தமானவர்களாக இருந்தார்கள் என்பது எமது நம்பிக்கையாகும். ஏனெனில், பாவச்செயல்களிலோ, தவறிழைப்பதிலோ அவர்கள் ஈடுபடும் பட்சத்தில் நபித்துவத்திற்குரிய அந்தஸ்தும், தகைமையும் அவர்களிடமிருந்து எடுக்கப்பட்டு விடும். தவிரவும், அவர்களை தமது வழிகாட்டியாகவும், முன்மாதிரி யாகவும் எடுத்துக் கொள்வதில் மனிதர்களும் உடன்பாடற்றவர்களாக மாறிவிடுவார்கள்.

ஆயினும் சில நபிமார்கள், பாவங்களில் அல்லது தவறுகளில் ஈடுபட்டதாக அல்குர்ஆன் வசனங்களிலும் ஹதீஸிலும் வெளிரங்க அர்த்தத்தில் காண முடிகின்றது. இது "தர்குல் அவ்லா" வகையைச் சேர்ந்ததென்பதே எமது நம்பிக்கையாகும். அதாவது நன்மைக்குரிய இரு அம்சங்களில், நன்மை அதிகமுள்ளதை விட்டு, நன்மை குறைவாக இருப்பதைத் தெரிவு செய்வதாகும்.

### 4. நபிமார்கள் அல்லாஹ்வின் அடியார்கள்

நபிமார்களும், ரசூல்மார்களும் அல்லாஹ்வுக்கு முற்றிலும் வழிப்பட்டு நடக்கக் கூடிய அடியார்கள் என்பது அவர்களுக்குரிய முக்கிய சிறப்பாகும். இதனால் தான், முஸ்லிம்கள் தமது நாளாந்த தொழுகையின் போது பின்வரும் வசனத்தை மீட்டி மீட்டிச் சொல்கின்றனர்.

"நிச்சயமாக முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் அல்லாஹ்வின் அடிமையும் தூதருமாவார்கள் என நான் சாட்சி கூறுகின்றேன்."

எந்தவொரு இறைத் தூதரும், தன்னை இறைவன் என பிரகடனப்படுத்திக் கொண்டு, தன்னை

வணங்கும்படியாக மக்களுக்கு அழைப்பு விடுக்க வில்லை.

> "எந்தவொரு மனிதருக்கும் வேதத்தையும், ஞானத்தை யும், நபித்துவத்தையும் அல்லாஹ் அவருக்குக் கொடுத்திருக்க, பின்னர் அவர் மனிதர்களிடம், அல்லாஹ்வையன்றி எனக்கே அடியார்களாகி என்னையே வணங்கி விடுங்கள் என்று கூற இயலாது." *(03: 79)*

ஹஸ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம், சில கிறிஸ்தவர்களால் இறைவன் என மதித்து வணங்கப் படுகின்றார்கள். ஆனால், ஒரு போதும் அன்னார் தம்மை வணங்குமாறு மக்களுக்கு அழைப்பு விடுக்கவில்லை. மாறாக, தம்மை அல்லாஹ்வின் தூதர் என்றும் அவனது அடியார் என்றுமே அறிமுகப்படுத்திக் கொண்டு, அல்லாஹ்வை வணங்குமாறே அழைப்பு விடுத்தார்கள்.

> "மஸீஹ்உம் அல்லாஹ்வுக்கு நெருக்கமான மலக்குக ளும் அல்லாஹ்வுக்கு அடிமையாயிருப் பதைக் குறைவாகக் கொள்ளவே மாட்டார்கள்." *(04:172)*

கிறிஸ்தவர்களின் 'திரித்துவம்' (மூவர் கொண்ட தனிக் கடவுள்) எனும் கோட்பாடு, முதலாம் நூற்றாண்டிற்குப் பின்னர் புதிதாகத் தோன்றிய ஒன்றே என வரலாறு கூறுகிறது.

## 5. அற்புதங்கள்

நபிமார்கள் அல்லாஹ்வின் அடியார்களேயெனினும் அவர்கள் அல்லாஹ்வின் அனுமதியின் படி சென்றகால, நிகழ்கால, எதிர்கால விசயங்கள் பற்றிய சில தகவல்களைப் பெற்றுக் கொள்ள அது ஒரு போதும் தடையாக இருக்க மாட்டாது என்பதாக அல்குர்ஆன் விபரிக்கின்றது.

> "(அல்லாஹ்) மறைவானவற்றை அறிகிறவன். எனவே, தான் மறைத்து வைத்திருப்பவற்றை - தூதர்களில் தான் பொருந்திக் கொண்டோருக்கே

> தவிர- வேறு ஒருவருக்கும் அவன் வெளிப்படுத்தமாட்டான்." (72:26,27)

நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள், மக்களுக்கு பல இரகசிய விசயங்களைப் பற்றி தகவல் கொடுத்தார்கள். அது அவர்களுடைய பிரத்தியேக அற்புதங்களில் ஒன்றாகும்.

> "மேலும், நீங்கள் உண்பவற்றையும், உங்கள் வீடுகளில் சேகரித்து வைத்திருப்பவற்றையும் நான் உங்களுக்கு அறிவிப்பேன்." (03:49)

பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களும், இறைஞானத்தின் மூலமாக மறைவான சில விசயங்களைப் புரிந்து கொண்டு. அத்தகைய சில விடயங்களை வெளிப்படுத்திச் சொன்னார்கள்.

> "(நபியே!) இது நீர் அறியாத மறைவான செய்திகளில் உள்ளதாகும். இதை உமக்கு நாம் வஹி மூலம் அறிவிக்கின்றோம்." (12:102)

இதன் பிரகாரம், வஹியின் மூலமாகவும் இறைவனின் அனுமதியோடும் இறைத்தூதர்கள் மறைவான சில விசயங்களை அறிந்து கொள்ள முடியும் என்பது தெளிவாகிறது. சில அல்குர்ஆன் வசனங்களின் படி, மறைவானவை பற்றிய அறிவு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்கு இல்லையென்ற கருத்தை முன்வைப் பது போன்று தோன்றலாம்.

> "மறைவானவற்றை நான் அறியமாட்டேன். மேலும், நான் ஒரு மலக்கு என்று உங்களிடம் கூறவும் இல்லை." (06:50)

தான் இயல்பிலேயே மறைவானவை பற்றிய அறிவைக் கொண்டவன் அல்ல என்றும் அது அல்லாஹ்வுக்குரிய விசயம் என்றும் நபியவர்கள் வலியுறுத்துவதாகவே இது உள்ளது. இறை கட்டளைப் படி அல்லது அவனது அனுமதிப் படி சில விசயங்களைத் தெரிந்து

வைத்திருப்பது சாத்திய மானதே.

இறைத்தூதர்கள் அல்லாஹ்வின் அனுமதியுடன் பல்வேறு அற்புதங்களை செய்து காட்டினார்கள். எனவே, அவற்றை நம்புவது, ஷிர்க்கை வருத்துவதாகவோ நமது அடிமைத் தனத்தைக் களங்கப் படுத்துவதாகவோ ஆக மாட்டாது என்பது நமது நம்பிக்கையாகும். ஈஸா அலைஹிஸ்ஸலாம், பரிகாரம் காண முடியாது என்றிருந்த நோய்களைக் குணப்படுத்தியதோடு, இறந்தவர்களை உயிர்ப்பிக்கும் அற்புதத்தையும் இறைவனின் அனுமதிப்படி செய்து காட்டினார்கள்.

> "நான், அல்லாஹ்வின் அனுமதியைக் கொண்டு வெண்குஷ்டம், கருங்குஷ்டங்களை குணப் படுத்துவதோடு இறந்தோரையும் உயிர்ப்பிப்பேன் என ஈஸா நபி சொன்னார்கள்." *(03: 49)*

## 6. நபிமார்களின் ஷபாஅத்

நபிமார்கள் அனைவரும் குறிப்பாக பெருமானார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், மறுமை நாளில் பாவிகளில் சிலருக்காக அல்லாஹ்விடம் பரிந்துரை செய்யும் அந்தஸ்தைப் பெற்றுள்ளார்கள் என்று நாங்கள் நம்புகின்றோம். ஆனால், இதுவும் அல்லாஹ்வின் அனுமதியுடன் தான் நடைபெறும் என்பது கவனிக்கத் தக்கது. அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது:

> "அல்லாஹ்வின் அனுமதியைப் பெற்ற பின்பே தவிர எந்தவொரு சிபாரிசு செய்பவருமில்லை." *(10:03)*

> "அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் பரிந்து பேசுவோர் யார்?" *(02: 255)*

அதேவேளை, சில அல்குர்ஆன் வசனங்கள், சிபாரிசு செய்வதென்று ஒன்று இல்லை என்ற கருத்தைச் சொல்வதாக பொதுவாகத் தோன்றலாம்.

> "எவ்விதமான பரிமாற்றமும் நட்பும் பரிந்துரையும் இல்லாத நாள் வருமுன்......" *(02: 254)*

இங்கு குறிப்பிடப்படும் (ஷபாஅத்) பரிந்துரை என்பது அல்லாஹ்வின் அனுமதி இல்லாது, சுயவிருப்பின் பேரில் செய்யப்படும் பரிந்துரையைக் குறிப்பதாக இருக்கலாம். அல்லது, தகுதியற்றோர் பரிந்துரை செய்வதைக் குறிக்கலாம். நபிமார்களோ, சுயவிருப்பின் பேரிலல்லாமல், அல்லாஹ்வின் அனுமதி யுடனேயே பரிந்துரை செய்வதும் அவர்கள் பரிந்துரை செய்வதற்கு முழுத் தகுதியும் உள்ளவர்களாக இருப்பதும் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

பரிந்துரையானது, மனிதர்களிடையே ஒழுக்கம், தூய்மை, இறையச்சம் போன்ற பண்புகளைக் கட்டியெழுப்பு வதற்கும் ஆன்மீக உரமூட்டல்களை மேற்கொள்வதற்கும் பாவிகளை நல்வழிப் படுத்தவும் நல்வழியில் தூண்டவும் சிறந்த காரணியாக அமைந்துள்ளது. அதேவேளை, ஷபாஅத் என்பதும் வரையறைகளற்ற எளிய விடயமல்ல.

மேலும், ஷபாஅத் செய்யப்படுவோர் பாவிகளாக இருப்பினும், அவர்களது பாவச்செயல், சிபாரிசு செய்யக் கூடியவர்களுடன் இருக்கும் தொடர்பை முற்றாகத் துண்டிக்கக் கூடியதாக இருக்கக் கூடாது. இதனால் தான், பாவிகள் தமக்குரிய அனைத்து ஷபாஅத்துக்கான படிகளையும் தகர்த்து விட வேண்டாமெனவும், அவற்றை முடிந்தவரை பேணிக் கொள்ளுமாறும் இஸ்லாம் எச்சரித்து வலியுறுத்து கின்றது.

## 7. தவஸ்ஸுல் (வஸீலா தேடுதல்)

வஸீலா தேடுவதென்பதும் ஷபாஅத்தைப் போன்ற ஓர் அம்சமே. இது, இறைநேசர்கள், இறைவனின் அனுமதிப் பிரகாரம் எமது தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள

இறை சந்நிதானத்தில் உதவுவதையே குறிக்கிறது. அதாவது, நாம் அல்லாஹ்வையே விளித்து, பிரார்த்தனையில் ஈடுபடுகின்றோம். மறுபுறம் இறைநேசர் களை நமது பிரார்த்தனைக்கான உதவியாகக் கொண்டு அல்லாஹ்விடம் பிரார்த்திக் கின்றோம்.

> "இன்னும், நிச்சயமாக அவர்கள் தமக்குத் தாமே அநீதமிழைத்துக் கொண்டு உம்மிடம் வந்து, பின்னர் அல்லாஹ்விடம் அவர்கள் மன்னிப்புக் கோரி, அவர்களுக்காக அல்லாஹ்வுடைய தூதரும் பாவ மன்னிப்புக் கோரியிருந்தால், தவ்பாவை ஏற்பவனாகவும் மிகக் கிருபையுடைய வனாகவும் அல்லாஹ்வை அவர்கள் கண்டிருப்பார்கள்." *(04:64)*

நபி யூசுபின் (அலைஹிஸ்ஸலாம்) சகோதரர்கள், தமது தந்தையை வஸீலாவாகக் கொண்டு, தாம் செய்த குற்றத்திற்கு அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி னார்கள். அவர்கள், தம் வயோதிபத் தந்தையான ஹஸ்ரத் ய.்.கூப் நபியை (அலைஹிஸ்ஸலாம்) நோக்கிக் கூறினார்கள்:

> "எங்கள் தந்தையே! எங்கள் பாவங்களை மன்னிக்குமாறு நீங்கள் எங்களுக்காக பாவ மன்னிப்புத் தேடுவீர்களாக. நிச்சயமாக நாம் குற்றவாளிகளாவோம்." *(12:97)*

நபி ய.்.கூபும் அலைஹிஸ்ஸலாம் தமது மக்களின் வேண்டுகோளை ஏற்று அல்லாஹ்விடத்தில் அவர்களு க்காக பிழைபொறுக்கத் தேடுவதாகக் கூறினார்கள்.

> "நான் விரைவில் என் இறைவனிடத்தில் உங்களு க்காக மன்னிப்புக் கோருவேன்." *(12: 98)*

இது போன்ற ஆதாரங்கள் அனைத்தும் வஸீலா என்பது முன் சென்ற உம்மத்தாரின் வழிமுறையாக இருந்தது என்பதை ஊர்ஜிதம் செய்கின்றன.

ஆயினும், வஸீலாவுடைய சந்தர்ப்பங்களில் எல்லை களை சரியாகப் பேணிக் கொள்வது மிக இன்றியமை

யாத அம்சமாகும். இறைநேசர்கள், அனைத்து விடயங்களிலும் தாமாக சக்தி கொண்டவர்கள் என்றோ, அவர்களுக்கு அல்லாஹ்வின் அனுமதியோ, உதவியோ அவசியற்றது என்றோ நம்பிக்கை கொண்டு விடக் கூடாது. இது, மன்னிக்க முடியாத பாவச் செயலான இணைவைத்தலுக்கு இழுத்துக் கொண்டு சேர்க்கும்.

மேலும், வஸீலா தேடுவதென்பது, இறை நேசர்களை வணங்கும் அடிப்படையில் அமைந்து விட்டால், அதுவும் இணைவைத்தலாகி விடும். இறைநேசர்களா யினும் அவர்களும் அல்லாஹ்வின் அடியார்களாகவும், அவனது உதவியின்றி எவ்வித காரியமாற்றுவதற்கும் சக்தியற்றவர்களாகவுமே இருக்கின்றார்கள் என்பது மறுக்க முடியாத அம்சமாகும்.

> "(நபியே!) கூறுவீராக! அல்லாஹ் நாடினாலே தவிர, எனக்கு நானே நன்மை-தீமையைத் தடுத்துக் கொள்வதற்கும் சக்தி பெறமாட்டேன்."
> *(07:188)*

எல்லா மத்ஹபைச் சேர்ந்தவர்களிடத்திலும் வஸீலா தேடும் விசயத்தில் சார்பாகவும் முரணாகவும் அதி தீவிரப் போக்கைக் கடைப்பிடிப்போர் உள்ளனர். இவர்களுக்கு இதன் உண்மை தெளிவுபடுத்தப் பட்டு வழிகாட்டப்படுவது அவசியமாகும்.

## 8. நபிமார்களுடைய அழைப்பு

உலகிற்கு அனுப்பப்பட்ட அனைத்து நபிமார்க ளினதும் அழைப்பின் நோக்கம் ஒன்றாகவே இருந்துள்ளது என நம்புகின்றோம். மனிதர்களை இறை நம்பிக்கையின் மூலமாகவும், மறுமை விசுவாசத்தின் மூலமாகவும் விமோசனத்தின் பால் கொண்டு சேர்ப்பதாகவே இருந்தது. இந்நோக்கை அடைவதற்காக, கற்பித்தல், முறையான பயிற்றுவித்தல், வழிகாட்டல் என பல்வேறு அர்ப்பணிப்புடனான பணிகளை அவர்கள் மேற்கொண் டார்கள். இதனாலேயே, அனைத்து நபிமார் களும் முஸ்லிம்களிடத்தில் ஏற்றத் தாழ்வின்றி மதிப்பு மிக்கவர்களாகவும் விருப்புக்குரியவர்களாகவும் விளங்கு கின்றார்கள்.

"அவனுடைய தூதர்களில் எவருக்கிடையிலும் நாங்கள் வேற்றுமைப்படுத்தி விடமாட்டோம்."
*(02: 285)*

காலவோட்டத்தில் மனித இனத்தின் அறிவு வளர்ச்சிக்கு ஏற்புடைத்த விதத்தில், அவர்களுக்கு கட்டம் கட்டமாக வழங்கப்பட்டு வந்த சமய வழிகாட்டல்கள், பின்னையது முன்னையதை விட பரிபூரணத்துவத்தில் கூடியதாகவும் ஆழமிக்கதாகவும் காணப்பட்டது. இறுதியாக, மிகப் பரிபூரணத்துவம் பெற்ற வழிகாட்டலின் அவசியமும் அதற்குரிய நிலைமைகளும் தோன்றிய போது இறுதி வேதமாக இஸ்லாம் அருளப்பட்டது. கட்டம் கட்டமாக முன்னர் வழங்கப்பட்டு வந்த முன்னைய வழிகாட்டல் களை விஞ்சிய அதன் ஏக பரிபூரணத்துவத்தைப் பற்றி பின்வரும் இறைவாக்கு வெளியாகியது.

"இன்றைய நாள், உங்களுக்காக உங்களது மார்க்கத்தை நான் பரிபூரணமாக்கி வைத்து விட்டேன். இன்னும், என்னுடைய அருட் கொடையை உங்கள் மீது முழுமையாக்கி விட்டேன். மேலும், உங்களுக்காக இஸ்லாத்தை மார்க்கமாக நான் பொருந்திக் கொண்டேன்."
*(05:03)*

## 9. முந்திய நபிமார்களின் அறிவிப்பு

அநேகமான நபிமார்கள், தமக்குப் பின் வரவுள்ள இறைத்தூதரைப் பற்றிய முன்னறிவிப்புகளை மக்களுக்கு வழங்கியிருக்கின்றார்கள். நபி மூஸா (அலைஹிஸ்ஸலாம்), நபி ஈஸா (அலைஹிஸ்ஸலாம்) ஆகியோர் இறுதி இறைத்தூதரான முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி) நபியின் வருகை பற்றி மக்களுக்கு முன்னறிவிப்பு செய்துள்ளார்கள். அவற்றில் சில இப்போதும் அச்சமயத்தவர்களது வேத நூல்களில் காணப்படுகின்றன.

"அவர்கள் தங்களிடமுள்ள தவ்ராத்திலும், இன்ஜீலிலும் குறிப்பிடப்பட்டுள்ள உம்மி நபியான இத்தூதரை பின்பற்றுகின்றார்கள்..... அவர்கள் தாம் வெற்றியாளர்கள்." *(07:157)*

நபி முஹம்மதின் (ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி) நபித்துவத்திற்கு முன்னர், யஹூதிகளின் மிகப் பெரும் கூட்டமொன்று, மதீனாவில் குடியேறி, முஹம்மத் நபியவர்களின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. ஏனெனில், அவர்களது வேதத்தில் குறிப்பிடப்பட்டிருந்த இறைத்தூதர் இம்மண்ணிலிருந்து தான் வருவார் என அவர்கள் நம்பியிருந்தனர்.

நபிகளார், உலகில் தமது தூதுத்துவத்தைப் பகிரங்கப் படுத்திய போது, அவர்களில் சிலர் அதனை ஏற்றுக் கொண்டனர். வேறு சிலரோ தமது நலனையும், சுயலாபத்தையும் கருத்திற் கொண்டு நபியவர்களைப் புறக்கணித்து அலட்சியம் செய்தனர்.

## 10. நபிமார்களும் சீர்திருத்தப் பணியும்

நமது நம்பிக்கையின் படி, இஸ்லாம் மார்க்கம், வெறுமனே மனிதர்களது ஆன்மீக நிலையை தெளிவுபடுத்தி, நல்லொழுக்கத்தை வரையறை செய்வதற்காக மட்டும் உருவாக்கப்பட்டதல்ல. மாறாக அது, சமூக வாழ்வின் அனைத்துப் பரிமாணங்களையும் சீர்படுத்திச் சிறப்புறச் செய்வதிலும் கவனம் செலுத்துகிறது. அன்றாட வாழ்வுக்கு அவசியமான பல்வேறுபட்ட சாஸ்திரங்களையும் கலைகளையும் மக்கள் நபிமார்களிடமிருந்து கற்றுக் கொண்டார்கள். அல்குர்ஆனும் அவற்றுள் சிலவற்றைத் தொட்டுக் காட்டுகிறது.

சமூகங்களின் மத்தியில் நீதியை நிலைநிறுத்து வதும் நபிமார்களுடைய முக்கிய பணியாக விளங்கியது என நாம் நம்புகிறோம்.

> "நிச்சயமாக நாம், நம்முடைய தூதர்களை தெளிவான அத்தாட்சிகளுடன் அனுப்பி வைத்தோம். அவர்களுடன் வேதத்தையும், நீதியைக் கொண்டு நிலைத்திருப் பதற்காக தராசையும் இறக்கினோம்." *(57: 25)*

## 11. மானுட சமத்துவம் பேணல்

நபிமார்கள் எவரும் இன, வர்க்க, குல ரீதியான வேறுபாடுகளை அங்கீகரிக்கவில்லை. சகல

குலத்தாரும், சகல மொழி பேசுவோரும் அவர்களது பார்வையில் சமத்துவம் மிக்கோராகவே காணப்பட்டனர். அல்குர்ஆன் இவ்வாறு கூறுகின்றது:

> "மனிதர்களே! நிச்சயமாக நாம், உங்களை ஓர் ஆண், ஒரு பெண்ணிலிருந்தே படைத்தோம். இன்னும், ஒருவருக்கொருவர் அறிமுகமாகிக் கொள்வதற்காக உங்களை கிளைகளாகவும், கோத்திரங்களாகவும் ஆக்கினோம். நிச்சயமாக, அல்லாஹ்விடத்தில் உங்களில் மிக்க கண்ணிய முள்ளவர் உங்களில் மிக்க பயபக்தி உடையவர் தான்." *(49:13)*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், ஹஜ்ஜதுல் விதாவின் போது, மினாவில் வைத்து, ஒட்டகத்தின் மீது அமர்ந்தவர்களாக மக்களை நோக்கிச் சொன்னார்கள்:

"மனிதர்களே! அறிந்து கொள்ளுங்கள். உங்கள் இறைவனும் ஒருவன். உங்கள் தந்தையும் ஒருவர். எனவே, இறையச்சத்தின் மூலமாக அல்லாமல், வேறெ தனாலும் ஓர் அறபி அஜமியை விட சிறந்தவரில்லை. ஓர் அஜமியும் அறபியை விட சிறந்தவரில்லை. இன்னும், கறுப்பனுக்கு சிவந்த நிறமுடையவனை விட சிறப்பில்லை, சிவந்த நிறமுடை யவனுக்கு கறுப்பனை விட சிறப்புமில்லை. எனவே, நான் இறை தூதை எத்தி வைத்து விட்டேனா?" என்று வினவினார்கள். அதற்கு அங்கிருந்தோர் "ஆம்" எனக் கூற, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், "இங்கு சமுகமளித் திருப்பவர்கள், வராதிருப்போருக்கு இவற்றை த்தெரியப் படுத்துங்கள்" எனக் கூறினார்கள்.

(தப்ஸீருல் குர்துபி - பா *9* - பக் *6162*)

## 12. இஸ்லாமும் மனிதனது இயல்பூக்கமும்

ஏகத்துவத்தின் அடிப்படையில் அல்லாஹ்வைப் பற்றிய நம்பிக்கையும், நபிமார்களது கற்பித்தலின் அடிப்படை களும் இயல்பாகவே மனிதர்களுடைய ஆத்மாவுடன் மேலோட்டமாக பின்னிப் பிணைந்து காணப்படுகின்றன என நாம் நம்புகின்றோம். இறைத் தூதர்கள், அதிக

கனி தரக்கூடிய இவ்விதைகளுக்கு வஹியெனும் கடலிலிருந்து நீர் பாய்ச்சி, அவற்றின் ஓரங்களில் இருந்து ஷிர்க் போன்றகளைகளை அப்புறப்படுத்தி னார்கள்.

> "எந்த இயல்பில் அல்லாஹ் மனிதர்களைப் படைத்தானோ,அதுவே அல்லாஹ்வின் இயற்கை மார்க்கமாகும். அல்லாஹ்வின் படைத்தலில் மாற்றமில்லை. அதுவே நிலையான மார்க்க மாகும். ஆனால், மனிதர்களில் பெரும்பாலா னோர் இதை அறிய மாட்டார்கள்."(30: 30)

இதனால் தான், மக்களிடையே சமய நம்பிக்கை தொன்மை வாய்ந்ததாகக் காணப்படுகின்றது. பெரும் வரலாற்றாசிரியர்களின் கூற்றுப் படி, நாஸ்திகம் என்பது மிகவும் அரிதாகக் காணப்பட்ட ஒன்றாகும். இதனால் தான், வாழ்நாள் முழுவதும் சமய விரோத அடக்குமுறைகளுக்கும் துர்ப் பிரசாரங்களுக்கும் மத்தியில் வாழ்ந்த மக்களும் கூட, சுதந்திரத்தின் பின்னான வாழ்வில் சமயத்தின் பால் வேட்கையோடு ஓடி வருகின்றார்கள்.

ஆனால், முன்னிருந்த பல சமுதாயத்தவர்களின் வளர்ச்சியடையாத கலாசாரப் பண்புகள், அவர்களது மார்க்கத்திலும் ஒழுக்க நெறிமுறைகளிலும் மூடக் கொள்கைகள் இரண்டறக் கலப்பதற்குக் காரணமாக அமைந்திருந்தன என்ற உண்மையையும் மறுக்க முடியாது. மனிதர்களது இயல்பூக்கமான மார்க்கத்தை, இத்தகைய கறைபடிந்த மூடக் கொள்கைகளிலிருந்து பரிசுத்தமாக்குவதும் நபிமார்களின் ஒரு முக்கிய பணியாக விளங்குகிறது.

அத்தியாயம் 3

# குர்ஆன்

## 1. வேதங்கள் இறக்கப்பட்டதன் நோக்கம்

உலகில் மனிதர்களுக்கு நேர்வழியைக் காண்பிப்பத ற்காக அல்லாஹ் வேதங்களை இறக்கினான். அல்லாஹ் உலகில் இறக்கி வைத்த வேதங்களாவன: தவ்ராத், ஸபூர், இன்ஜீல், குர்ஆன். இவற்றோடு நபி நூஹ் (அலை) , நபி இப்ராஹீம் (அலை) போன்றோருக்கு சுஹுஃபுகளும் வழங்கப் பட்டுள்ளன. இறுதி வேதமான அல்குர்ஆன், அதற்கு முந்தியவற்றை விட பரிபூரணமா னதாகும்.

வேதங்கள் இறக்கப்பட்டிருக்கவில்லையெனில், மனிதர்கள், இறைவனை அறிவதிலும் வணங்குவதிலும் பெருந்தவறுகளை இழைத்திருப்பார்கள். மேலும் ஒழுக்கம், இறையச்சம், அறநெறி, சமூக விதிமுறைகள் போன்ற அவசிய விடயங்களில் இருந்து தூரமாகி இருப்பார்கள்.

எனவே இறைவேதங்கள், இறையச்சம், ஒழுக்க நெறி, சமய சித்தாந்தம், அறிவு நுட்பம், மெய்யியல் போன்ற பல நல்விதைகளை மனிதர் மனங்களில் விதைத்து, மனிதப் புனிதர்களைப் பயிற்றுவித்து உருவாக்கின.

> "ரசூல், தம் இரட்சகனிடமிருந்து தமக்கு இறக்கி வைக்கப்பட்ட வேதத்தை ஈமான் கொள்கின்றார்.

அவ்வாறே மு.'.மின்களும் விசுவாசிக்கின்றனர். இவர்கள் ஒவ்வொரு வரும் அல்லாஹ்வையும் அவனது மலக்குகளையும் அவனது வேதங்களையும் ரசூல்மாரையும் ஈமான் கொள்கின்றனர்."
*(02: 285)*

முந்திய வேதங்கள் அனைத்தும், மனிதர்களின் குறுகிய சிந்தனையினாலும் அறியாமையினாலும் திரிபுக்கு உட்படுத்தப் பட்டிருக்க, அல்குர்ஆன் மாத்திரம் ஓர் அட்சரமும் மாற்றமின்றி பரிசுத்தமாக பேணப்பட்டு வருகின்றது. அது கதிரவன் போன்று யுகம் யுகமாக இருண்ட உள்ளங்களை ஒளிமயமாக்கிய வண்ணம் திகழ்கிறது.

"திட்டமாக, அல்லாஹ்விடமிருந்து பேரொளியும் தெளிவான ஒரு வேதமும் உங்களிடம் வந்திருக கின்றது. அல்லாஹ், அதன் மூலம் தன்னுடைய பொருத்தத்தினைப் பின்பற்றுகின்றவர்களை சமாதானத்திற்குரிய வழியில் செலுத்துகிறான"
*(05:15,16)*

## 2. அல்குர்ஆன் - இறுதி நபியின் பேரற்புதம்

இறுதி நபிக்கு வழங்கப்பட்ட மிக முக்கிய அற்புதமாக புனித அல்குர்ஆன் விளங்குகின்றது. இவ் அற்புதமென்பது அதன் இலக்கண இலக்கியச் சிறப்பினால் மட்டும் பெற்றுக் கொள்ளப் பட்டதன்று. அதன் எளிமை, கருத்தாழம் போன்ற இன்னோரன்ன காரணிகள் அதன் அற்புதத் தன்மைக்குச் சான்றாகும். இது பற்றி அகீதா மற்றும் இல்முல் கலாம் பற்றிய நமது நூல்களில் விளக்கப்பட்டுள்ளது.

அல்குர்ஆனுக்கு நிகரான வேதமொன்றை, ஏன் ஓர் அத்தியாயத்தைக் கூட உருவாக்குவது எவராலும் முடியாத விடயமாகும் என்று நாம் நம்புகின்றோம். இது தொடர்பாக சந்தேகம் கொண்டவர்களுக்கு அல்குர்ஆன் பல்வேறு கட்டங்களில் சவால் விடுகின்றது.

"(நபியே!) நீர் கூறுவீராக! இந்தக் குர்ஆனைப் போன்று ஒன்றைக் கொண்டு வருவதற்கு

மனிதர்களும் ஜின்களும் ஒன்று சேர்ந்தாலும், இதனைப் போன்று அவர்கள் கொண்டு வரமாட்டார்கள். அவர்களில் சிலர் சிலருக்கு உதவியாளர்களாக இருந்தாலும் சரியே."

*(17: 88)*

"மேலும், நம் அடியார் மீது நாம் இறக்கி வைத்த இவ்வேதம் பற்றி நீங்கள் சந்தேகத் திலிருந்தால், நீங்கள் உண்மையாளர்களாக இருப்பின், அல்லாஹ்வைத் தவிர, உங்கள் உதவியாளர்களை யெல்லாம் அழைத்துக் கொண்டு, இதுபோன்ற ஓர் அத்தியாயத்தைக் கொண்டு வாருங்கள்." *(02:23)*

அல்குர்ஆன் காலவோட்டத்தில் காலாவதி அடைந்து விடும் தன்மை கொண்டதல்ல. மட்டுமன்றி, அதன் உள்ளடக்கம் வர வர மிகத் தெளிவானதாகவும் அற்புதமானதாகவும் உலகுக்கு வெளிப்பட்டு வருகின்றது.

இமாம் ஜ.்.பர் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் கூறுகிறார்கள்: "நிச்சயமாக அல்லாஹ், இந்தக் குர்ஆனை ஒரு குறிப்பிட்ட காலத்திற்கோ, அல்லது ஒரு குறிப்பிட்ட சமூகத்துக்கோ வழங்க வில்லை. அது ஒவ்வொரு காலத்திலும் புதியதாகவே தோன்றும். ஒவ்வொரு கூட்டத்தினரிடத்திலும் மறுமை நாள் வரை புதிதாக செழுமை பெற்றுக் கொண்டேயிருக்கும்."

(பிஹாருல் அன்வார்- பாக 2 - பக் 280)

### 3. அல்குர்ஆனில் மாற்றம் நிகழாது

இன்று உலக முஸ்லிம்களின் கைகளில் காணப்படும் அல்குர்ஆன், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்கு இறக்கியருளப் பட்ட அதே அல்குர்ஆன் தான் என்பதும் அதில் எவ்வித கூட்டல் குறைத்தலும் இடம்பெற வில்லை என்பதும் எமது நம்பிக்கையாகும்.

வஹீயை எழுதி வந்த ஒரு குழுவினர், அல்குர்ஆன் இறங்கிய காலத்திலேயே அதனை எழுத்துருவாக்கம் செய்து கொண்டிருந்தார்கள். எல்லோரும் அதன்

பகுதிகளை தமது நாளாந்த தொழுகைகளில் பல முறை ஓதி வந்தார்கள். பெரும் தொகையினர் அவற்றை மனனமிட்டுக் கொண்டிருந்தனர். அல்குர்ஆனை அழகுற ஓதுவோரும் மனனமிட்ட வர்களும் எப்போதும் சமூகத்தில் உயர்ந்த அந்தஸ்தைப் பெற்றனர், பெறுகின்றனர். இவ்வாறான காரணங்க ளினால் அல்குர்ஆனில் எவராலும் சிறிய மாற்றத்தைக் கூட ஏற்படுத்த முடியவில்லை.

அத்துடன், உலக முடிவு வரை அல்குர்ஆனைப் பாதுகாக்கும் பணியை அல்லாஹ்வே பொறுப்பேற்று ள்ளான் என்பது அதன் மற்றுமொரு முக்கிய அற்புதமாகும்.

> "நிச்சயமாக நாமே இந்த குர்ஆனை இறக்கி வைத்தோம். இன்னும் நிச்சயமாக நாமே அதனைப் பாதுகாப்போம்." *(15:19)*

முஸ்லிம்களின் தலைசிறந்த அறிஞர்களும் ஆய்வாளர்களும் -ஷீஆ, சுன்னா வேறுபாடின்றி- அல்குர்ஆனில் எவ்வித திரிபுபடுத்தலும் இடம்பெற வில்லையென்ற விசயத்தில் ஏகோபித்த கருத்தையும் முடிவையும் கொண்டுள்ளனர். இவ்விரு கூட்டத்திலு முள்ள சிறு குழுவினர், சில பலவீனமான தகவல்களை ஆதாரமாக வைத்துக் கொண்டு, அல்குர்ஆனில் மாற்றம் நிகழ்ந் துள்ளதாக குற்றம் சாட்ட முனைகின்றனர். ஆனால், அவர்கள் ஆதாரமாகக் கொள்ளும் தகவல்கள் மற்றும் தரவுகள் அனைத்தும் மவ்ழூஉ -கட்டி விடப்பட்ட கற்பனைகள்- என ஹதீஸ் கலை அறிஞர்கள் விளக்கம் தருகின்றனர். மேலும் சில தகவல்கள் தப்ஸீரோடு சம்பந்தப்பட்டவையன்றி புனித குர்ஆனுடன் நேரடியாகத் தொடர்புடையவையன்று.

குறுகிய சிந்தனைப் போக்கும் தெளிவற்ற அறிவும் கொண்ட சிலர், குர்ஆனில் மாற்றம் செய்ததாக ஷீயாக்கள் மீதோ, அஹ்லுஸ் ஸுன்னாக்கள் மீதோ குற்றம் சுமத்துவதற்கு முனைகின்றனர். இத்தகையோர், தமது அறியாமையினால் அல்குர்ஆனின் பரிசுத்தத்திற்கு களங்கம் ஏற்படுத்தி, இஸ்லாத்தின் விரோதிகளுக்கு பல

வகைகளில் துணைபோகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் காலத்திலிருந்து அல்குர்ஆன் கோர்வை செய்யப்பட்ட வரலாற்றையும் முஸ்லிம்கள் குறிப்பாக வஹி எழுதுபவர்கள் அவற்றைப் பாதுகாப்பதற்காக எழுதுதல், மனனமிடுதல், ஓதுதல் போன்ற முயற்சிகளில் ஈடுபட்டு வந்த நிகழ்வுகளையும் ஆராயுமிடத்து, அல்குர்ஆனில் மாற்றங்கள் நிகழ்வதென்பது சிறிதும் சாத்தியமற்றதே என்ற உண்மையை தெளிவாக விளங்கிக் கொள்ள முடியும்.

மேலும், உலகில் இப்போதுள்ள குர்ஆனைத் தவிர, வேறு குர்ஆன் இல்லை. இதற்கான ஆதாரங்கள் தெளிவாக முன்வைக் கப்பட்டிருப்பதுடன், அது பற்றிய ஆய்வுக்கான வழிகளும் தாராளமாகத் திறந்திருக் கின்றன. அல்குர்ஆன், தற்போது முஸ்லிம்கள் அனைவரது இல்லங்களிலும் இருக்கின்றது. பள்ளிவாசல்கள், பொதுநூலகங்கள் என உலகின் அனைத்து நாடுகளிலும் அனைத்துப் பிரதேசங் களிலும் இருக்கின்றது. பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்ட அல்குர்ஆனின் கையெழுத்துப் பிரதிகள் பல நூதனசாலைகளில் காணப்படுகின்றன. எண்ணிலடங்காத மனித நெஞ்சங்களிலும் அது இருக்கின்றது. இவை அனைத்தையும் சான்றாகக் கொண்ட ஆய்வுகளின் முடிவுகள், அல்குர்ஆனின் மாற்றங்களுக்கு உட்படாத புனிதத் தன்மையைத் தெளிவாக பறைசாற்றியிருக்கின்றன. முன்னையரை விட ஆய்வு வசதிகள் அதிகரித்துக் காணப்படுகின்ற இக்கால கட்டத்தில் குர்ஆனைப் பற்றிய இந்த அபாண்டத்தின் பலவீனத்தை இலகுவாகவே நிரூபித்துக் காட்ட முடியும்.

> "(நபியே!) சொல்லைச் செவியுற்று பின்னர் அதில் மிக அழகானதைப் பின்பற்றுகின்ற என் அடியார்களுக்கு நன்மாராயம் கூறுங்கள்."
>
> *(39:17,18)*

இன்று நமது சமயக் கல்வி நிறுவனங்களில் அல்குர்ஆனியல் சம்பந்தமான பல பாடபோதனைகளும் ஆய்வுகளும் இடம்பெறுகின்றன. அவற்றில் முக்கிய மானது, அல்குர்ஆனில் மாற்றம் நிகழாது என்பது சம்பந்தமானதாகும்.
இந் நூலாசிரியர் யாத்த 'அன்வாருல் உஸுல்' மற்றும் 'தப்ஸீர் அல் அம்ஸல்' போன்ற நூல்களிலும் கூட இது பற்றிய விரிவான விளக்கங்கள் உள்ளன.

**4. அல்குர்ஆனும் ஆன்மீக-இலௌகீக தேவைகளும்**
மனிதனின் ஆன்மீக-இலௌகீக வாழ்க்கைக்குத் தேவை யான விடயங்கள் அனைத்தினதும் அடிப்படைகள் அல்குர்ஆனில் தெளிவாகக் குறிப்பிடப் பட்டுள்ளன என்பது நமது உறுதியான நம்பிக்கையாகும். ஓர் அரசாங்கத்தை நிர்வகிப்பது, அரசியல் விவகாரங்களைக் கையாள்வது, ஏனைய சமூகத்தவர்களுடனான உறவுகள், சக வாழ்வின் அடிப்படைகள், போரும் சமாதானமும், சட்ட மற்றும் நீதி நிர்வாகம், பொருளாதார விவகாரங்கள் போன்ற இன்னோரன்ன அம்சங்கள் பற்றிய வழிகாட்டல்கள் குர்ஆனில் காணப் படுகின்றன. அவற்றைப் பின்பற்றி ஒழுகும் போது நமது வாழ்வு ஒளிமயமானதாக மாறும்.

> "(நபியே!) ஒவ்வொரு விடயத்திற்கும் தெளிவாகவும் நேர்வழியாகவும் அருளாகவும் முற்றிலும் தங்களை இரட்சகனிடம் ஒப்படைத்து விட்டவர்களுக்கு நன்மாராய மாகவும் உம் மீது நாம் இவ்வேதத்தை இறக்கினோம்." *(16: 89)*

எனவே சமயம் வேறு, அரசியல் வேறு என்ற பகுப்புகளுக்கு இஸ்லாத்தில் இடமில்லை. அரசாட்சி யைக் கையிலெடுத்து, இஸ்லாத்தின் உயரிய விழுமியங்களை அதன் மூலம் உயிர்ப்பிக்குமாறு அது கூறுகின்றது. அவ்உயிரோட்டத்தின் அடிப்படையில் முஸ்லிம் சமூகத்தைப் பயிற்றுவித்து, மக்கள் மத்தியில் சமநீதி வழங்குமாறும் அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான்.

"விசுவாசங் கொண்டோரே! உங்களுக்கோ, அல்லது உங்கள் பெற்றோருக்கோ, அல்லது நெருங்கிய உறவினருக்கோ விரோதமாக இருந்த போதிலும், நீதியை நிலைநிறுத்தியவர்களாக, அல்லாஹ்வுக்காகவே சாட்சி கூறுபவர்களாக இருங்கள்." *(04: 135)*

"எந்த சமூகத்தவரின் மீதான விரோதமும், நீங்கள் அநீதமாக நடந்து கொள்ள உங்களைத் தூண்டி விட வேண்டாம். நீங்கள் நீதியே செலுத்துங்கள். அதுதான் பயபக்திக்கு மிக நெருக்கமானதாகும்." *(05: 08)*

## 5. அல்குர்ஆனை ஓதுதல், ஆராய்தல், அமல்செய்தல்

அல்குர்ஆனை ஓதுவது மிகச் சிறந்த வணக்கங்களில் ஒன்றாகும். ஏனெனில், குர்ஆனை ஓதும் போது, அது அல்லாஹ்வைப் பற்றிய சிந்தனைக்கும், அறிவுக்கும் தூண்டுகோலாக அமைகின்றது. சிந்தனையென்பது, நற்காரியங்களின் ஊற்றுக் கண்ணாகும். அல்குர்ஆன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களைப் பார்த்துக் கூறுகின்றது:

"இரவில் சொற்ப நேரம் தவிர எழுந்திரும்! அதில் பாதி விழித்திரும். அல்லது அதிலிருந்து சொற்பத்தைக் குறைத்துக் கொள்ளவும். அல்லது, அதை விட அதிகப் படுத்திக் கொள்ளவும்.. அதில் குர்ஆனை நன்கு திருத்தமாக நிறுத்தி நிறுத்தி ஓதுவீராக." *(73: 2-4)*

அல்குர்ஆன் அனைத்து முஸ்லிம்களையும் பார்த்துக் கூறுகின்றது:

"எனவே, குர்ஆனிலிருந்து தங்களுக்கு இயன்றதை ஓதுங்கள்." *(73: 20)*

அல்குர்ஆனை ஓதுவதென்பது, அதன் கருத்தையும், அதில் கூறப்பட்டிருக்கும் விசயங்களையும் பற்றி சிந்திப்பதற்குக் காரணியாக அமைய வேண்டும். சிந்தித்து ஆராய்ச்சி செய்வது அல்குர்ஆனின்

வழிகாட்டலின் பிரகாரம் அமல் செய்வதற்கான முதலாவது படியாகும்.

> "அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க மாட்டார்களா? அல்லது அவர்களது இதயங்கள் மீது பூட்டுக்கள் இடப்பட்டுள்ளனவா?" (47: 24)
> "திட்டமாக நாம் குர்ஆனை உபதேசம் பெறுவதற்காக எளிதாக்கி இருக்கின்றோம். ஆகவே, இதனைக் கொண்டு படிப்பினை பெறக் கூடியவர் உண்டா?" (54: 17)
> "உமக்கு நாம் இறக்கியிருக்கும் இவ்வேதம் பரக்க த்துப் பெற்றதாகும். எனவே, அதைப் பின்பற்றுங் கள்." (06:155)

ஆகவே எவர் குர்ஆனை ஓதுவதிலும் அதை மனனம் செய்வதிலும் மாத்திரம் தமது முயற்சியையும் கவனத்தையும் மட்டுப்படுத்திக் கொள்கிறாரோ அவர்கள் அல்குர்ஆனை ஆராய்ந் தறிதல் மற்றும் அமல் செய்தல் ஆகிய இரண்டு முக்கிய விடயங் களையும் விட்டு விடுபவர்களாக இருக்காமல் அவதானித்துக் கொள்ள வேண்டும்.

## 6. தப்ஸீரின் விதிமுறைகள்

அல்குர்ஆன் வசனங்களை மொழியிலும் வழக்கிலும் உள்ள கருத்துகளிலே விளங்கிக் கொள்வது முக்கியமாகும். ஒரு சொல்லின் அர்த்தத்தை வரையறுக்கின்ற அல்லது வேறொரு பொருளைச் சுட்டுகின்ற விதத்திலான குர்ஆன், ஹதீஸ் மற்றும் அறிவு சார்ந்த ஆதாரங்கள் இருக்கும் பட்சத்தில் மாத்திரம் நாம் அதற்கொப்ப பொருள் கொள்ள முடியும்.
ஆனால், குர்ஆனுக்கு சந்தேகத்துடன் அல்லது சுய அபிப்பிராயத்தின் அடிப்படையில் விளக்கம் கொடுப்பதைத் தவிர்ந்து கொள்வது கடமையாகும். உதாரணமாக, பின்வரும் குர்ஆன் வாக்கியத்தை நோக்குவோம்.

> "எவர் இவ்வுலகில் குருடராக இருக்கின்றாரோ, அவர் மறுமையிலும் குருடரே." (17:72)

இங்கு குருடன் எனக் கூறப்பட்டிருப்பது, அங்கக் குறைபாடாகிய பார்வை ரீதியான குருட்டு நிலையன்றி, அக ரீதியான குருட்டு நிலையையே குறிக்கின்றது என்பது உறுதி. அதாவது அகப்பார்வையை இழந்தவர்கள் பற்றியே இவ்வசனம் பேசுகின்றது.

ஏனெனில், உலகில் அநேக நல்லடியார்களும் இறை நேசர்களும் கண்பார்வையற்றவர்களாக வாழ்ந்துள்ளார்கள். இங்கே குருடு என்பது மொழி ரீதியாக நாம் புரிந்து கொள்ளும் கருத்தன்றி இதயங்களின் குருட்டுத் தன்மையைக் குறிப்பதென அறிவுபூர்வமாகப் புரிந்து கொண்டோம்.

அதே போன்று, அல்குர்ஆன் இஸ்லாத்திற்கு எதிரான கூட்டத்தைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகின்றது:

> "செவிடர்கள், ஊமையர்கள், குருடர்கள். ஆதலால் அவர்கள் எதையும் அறிந்து உணர மாட்டார்கள்." *(2:171)*

இவ்வசனத்தை வெளிப்படையாக நோக்குமிடத்து செவிடு, ஊமை, குருடு ஆகிய மூன்று அங்கக் குறைபாடுகளும் உடையோர், எதையும் அறிந்து கொள்ள முடியாதவர்கள், அறிவிலிகள் என்ற கருத்துப் பிரதிபலிக்கின்றது. ஆயினும், இங்கு குறிப்பிடப்படும் நபர்கள் இத்தகைய அங்கவீன முற்றவர்களாகக் காணப்படவில்லை. இம்மூன்று குறைபாடு களும் அகநிலை சார்ந்த குறைபாடுகள் பற்றிய வர்ணிப்பு என்பது குறிப்பிடத்தக்கது.

அல்குர்ஆன், அல்லாஹ்வைப் பற்றிக் குறிப்பிடும் போது இவ்வாறு வர்ணிக்கிறது.

> "எனினும், அவனது இருகைகளும் விரிக்கப் பட்டிருக்கின்றன." *(05:64)*
> "(நூஹே!) எமது கண் முன்பாகவே கப்பலை நீர் செய்யும்."*(11:37)*

இவ்வசனங்கள், அல்லாஹ்வுக்கு கைகள், கண்கள் போன்ற உடலுறுப்புகள் இருப்பதாகக் குறிப்பிடுகின்றன

என்று பொருள் கொண்டு விடக் கூடாது. ஏனெனில் உறுப்புகள் உடலில் இருப்பவை. உடலோ அழிந்து விடுவது. இத்தகைய பண்புகளை விட்டும் அல்லாஹ் தூய்மையானவன்.

இங்கு அல்லாஹ்வின் கைகள் எனப்படுவது, அனைத்துலகையும் தனது கட்டளையின் கீழ் கொண்டிருக்கும் அவனது பூரண இறை சக்தியையும், கண்கள் எனப்படுவது, அனைத்து விடயங்களையும் உள்ளடக்கிய அவனது விசாலமான அறிவையும் குறிப்பிடக் கூடியதாகும்.

எனவே, மேலுள்ளவாறான வசனங்கள் குறிப்பிடும் கருத்துகளில் -அது அல்லாஹ்வினது சிபாத்துகளோ, வேறு அம்சங்களோ எதுவாயினும்- அக்ல், நக்ல் உடைய ஆதாரங்களின் அடிப்படையிலான வரையறைகளைக் கவனிக்காது தவிர்த்து விட்டு வெறும் மேலோட்ட மொழியர்த்தத்தில் தங்கி விடுவது ஏற்றுக் கொள்ளப்பட முடியாததாகும்.

ஏனெனில், உலகின் அனைத்துப் பேச்சாளர்களும் இவ்வாறான போக்கையே கையாளுகின்றனர். அல்குர்ஆனும் இப்போக்கை ஏகமனதாக அங்கீகரிக் கின்றது. ஈண்டு கவனிக்கத் தக்கது என்னவெனில் அத்தகைய வரையறைகளுக்கான ஆதாரங்கள் உறுதியானவையாக இருக்க வேண்டும் என்பதே.

> "எந்தவொரு தூதரையும் அவரது சமூகத்தாரின் மொழியைக் கொண்டேயல்லாது நாம் அனுப்ப வில்லை." (14:04)

## 7. சுய விரிவுரையின் விபரீதங்கள்

அல்குர்ஆனுக்கு சுய அபிப்பிராயத்தின் அடிப் படையில் விளக்கம் கொடுப்பது மிகவும் ஆபத்தான விடயமாகும். மிகப்பெரிய பாவங்களில் ஒன்றாகவும் அது கணிக்கப்படுகின்றது. அல்லாஹ்வை நெருங்குவ திலிருந்து தூரமாவதற்கும் இது ஒரு காரணமாக அமைந்து விடுகின்றது. அல்லாஹ் கூறுவதாக ஹதீஸுல் குத்ஸியில் குறிப்பிடப்படுகின்றது:

> "எவனொருவன், எனது வேதத்திற்கு சுய

அபிப்பிராயத் தைக் கொண்டு விரிவுரை கொடுக்கின்றானோ, அவன் என்னை ஈமான் கொள்ளவில்லை." (வஸாயில் - பாக 18 - பக 28 ஹதீஸ் 22)

உண்மையில் ஒருவர் பூரண ஈமானுடைய வராயின், இறைவசனங்களை தனது சுய விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்ற விதத்தில் அல்லாமல், உள்ளதை உள்ளபடி மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வார்.

மேலும் ஸஹீஹ் திர்மிதி, நஸாயீ, அபூதாவூத் போன்ற பிரபல்யமான கிரந்தங்களிலே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி கூறியதாக ஒரு ஹதீஸ் குறிப்பிடப்படுகின்றது:

"எவனொருவன் குர்ஆனுக்கு தனது சுய விருப்பின் பேரில் விரிவுரை கொடுக்கின்றானோ அல்லது அது பற்றி தனக்குத் தெரியாத ஒன்றைக் கூறுகின்றானோ, அவன் நரகில் தனது ஆசனத்தை ஒதுக்கிக் கொள்கிறார்." (மபாஹிஸ் ஃபீ உலூமில் குர்ஆன் - மன்னாஃ. அல்கத்தான் - பக் 304)

எத்தகைய பின்னணியும் ஆதாரமும் இன்றி தமது சொந்த அல்லது தாம் சார்ந்துள்ள குழுவின் விருப்பு வெறுப்புகள் மற்றும் நம்பிக்கைகளின் அடிப்படையில் குர்ஆனை விளங்குவதும் அவ்விளக்கத்தின் பிரகாரம் செயல்படுவதுமே இங்கு குறிப்பிடப் படுகிறது. உண்மையில் இத்தகையோர் குர்ஆனைப் பின்பற்றுவோர் அல்லர். மாறாக, குர்ஆன் தமது விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்ப இசைவுபட வேண்டுமென விரும்புகிறார்கள். குர்ஆன் பற்றி சரியான ஈமான் உள்ள எவரும் இக்காரியத்தில் இறங்க மாட்டார்கள்.

சுயவிருப்பின் பேரிலான விரிவுரைகளுக்கு இடமளிக்கப் படுமானால், அல்குர்ஆன் தனது அந்தஸ்திலிருந்தும் தரத்தில் இருந்தும் முற்றாக விழுந்துவிடக் கூடும். அதாவது, தத்தமது விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்ப விளங்கிக்க கொள்பவர் எந்தப் பிழையான கொள்கையையும் குர்ஆனில் இருப்பதாகக் காட்ட முனையலாம்.

இதன்படி, சுய அபிப்பிராயப் படி குர்ஆனுக்கு

விரிவுரை செய்வதானது, அதாவது, முறையான மொழி ஞானம், அரபு இலக்கியம் மேலும் அராபியர்கள் புரிந்து கொள்ளும் முறை என்பவற்றுக்கு முற்றிலும் முரண்படுகின்ற விதத்தில் தமது தனிப்பட்ட அல்லது ஒரு குழுவின் பிழையான சிந்தனைகள் மற்றும் கற்பனைகளுக்கு ஏற்ப குர்ஆனிய கருத்துக்களை விரிவுரை செய்வதானது, அல்குர்ஆனின் கருத்துக்கள் திரிபடை வதற்கு காரணமாகின்றது.

சுய அபிப்பிராயத்தின் அடிப்படையில் குர்ஆனுக்கு விரிவுரை வழங்கும் 'தப்ஸீர் பி அல் ர.்.யு' பல கிளைகளைக் கொண்டது. சில அல்குர்ஆன் வசனங்கள் விசயத்தில் பாரபட்சமாக, ஓர வஞ்சனையாக நடந்து கொள்வதும் அத்தகைய ஒன்றாகும். இதனை இவ்வாறு விளக்கலாம். உதாரணமாக ச.்.பாஅத், தவ்ஹீத், இமாமத் போன்ற சில தலைப்புகள் சம்பந்தப்பட்ட ஆயத்துகளில் தாம் ஏற்கனவே கொண்டுள்ள கொள்கை அல்லது நம்பிக்கைக்குச் சார்பாக அமைபவற்றையே தேர்ந் தெடுப்பர். தமது கொள்கை அல்லது நம்பிக்கைக்கு இயைபுடையதாக அமையாத ஆயத்து களை, அவை வேறுவகையில் சம்பந்தப்பட்ட ஆயத்துகளுக்கு விளக்கமாக அமையக் கூடிய போதிலும் அவற்றைக் கவனத்தில் எடுப்பதில்லை அல்லது கண்டும் காணாதது போல நழுவி விடுகின்றனர்.

குர்ஆனின் சொற்களை அவற்றின் மேலோட்ட வெளி அர்த்தத்தில் மாத்திரம் விளங்கிக் கொள்வதும் அது பற்றி அறிவுபூர்வ அல்லது மூலாதாரம் சார்ந்த பின்னணிகளைக் கவனத்திற் கொள்ளாமல் விடுவதும் எவ்வாறு குர்ஆனின் மூல அர்த்தத்தைத் திரிபுபடுத்துமோ, சுய அபிப்பிராயத்தின் படி அதனை விரிவுரை செய்வதும் அதே போன்ற திரிபு படுத்தலாகவே கருதப்படுகின்றது. இவை அனைத்தும் புனித குர்ஆனின் அதியுயர்ந்த போதனைகளிலிருந்தும் பெறுமானங்களிலிருந்தும் தூரமாக்கி விடுபவையாகும்.

## 8. குர்ஆனுக்கு விளக்கமாகும் நபிகளாரின் ஸுன்னா

அல்குர்ஆனுக்கு விளக்கவுரையாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் வழிமுறைகள்

விளங்குகின்றன. அவ்வழிமுறைகளின் அடிப்படையில் நாஸிஹ்-மன்ஸூஹ், பொதுவானவை-சிறப்பானவை (ஆம்மு-காஸ்ஸு) முதலான குர்ஆனியல் சார்ந்த அறிவுகளையும் மார்க்கத்தின் அடிப்படை மற்றும் கிளை அம்சங்கள் பற்றிய போதனைகளையும் புரிந்து கொள்ள முடிகின்றது. எனவே இத்தகைய அம்சங்களைப் புறக்கணித்து விட்டு, குர்ஆன் மாத்திரம் எமக்குப் போதுமானதென யாரும் கூறிவிட முடியாது. திரு நபியின் போதனைகளையும் நடை முறைகளையும் முஸ்லிம்கள் பின்பற்றியொழுக வேண்டிய ஓர் அடிப்படையாகவும் இஸ்லாத்தைப் புரிந்து கொள்வதற்கும் சட்டங்களைத் தொகுத்துக் கொள்வதற் குமான மூலாதாரங்களில் ஒன்றாகவும் குர்ஆன் பிரகடனம் செய்கிறது.

> "இறைத்தூதர் உங்களுக்கு எவற்றைக் கொண்டு வந்தாரோ, அவற்றை எடுத்துக் கொள்ளுங்கள். எவற்றை விட்டும் உங்களைத் தடுத்தாரோ அவற்றிலிருந்து நீங்கள் விலகிக் கொள்ளுங்கள்." (59: 07)
>
> "அல்லாஹ்வும், அவனது தூதரும் யாதொரு காரியத்தை முடிவெடுத்து விட்டால், அவர்க ளுடைய அக்காரியத்தில் சுயமாக வேறு அபிப்பிராயம் கொள்வதற்கு விசுவாசியான எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிமையில்லை. அல்லாஹ்வுக்கும், தூதருக்கும் எவர் மாறு செய்கிறாரோ, அவர் பகிர ங்கமான வழிகேட்டில் திட்டமாக வழிகெட்டு விட்டார்." (33:36)

நபிகளாரின் ஸுன்னாவை அலட்சியம் செய்வோர் உண்மையில் அல்குர்ஆனை மதிக்கிறார்களில்லை. அதேவேளை, நபிகளாரின் வழிமுறைகள் பற்றிய தகவல்கள், பல்வேறு அறிவிப்புகள் மூலம் உறுதிப்படுத்தப்படல் அவசியமாகும். நபிகளாரைத் தொடர்புபடுத்திக் கூறப்படும் அனைத்து அறிவப்புக ளையும் ஏற்றுக் கொள்ள முடியாது.

ஹஸ்ரத் அலீ அலைஹிஸ் ஸலாம் அறிவிப்பதாவது,

"நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் வாழ்ந்து கொண்டிருந்த சந்தர்ப்பத்தில், அவர்கள் மீது சிலர் பொய்யுரைத்தனர். இதனால், நபியவர்கள் ஒருநாள் குத்பாவின் போது இவ்வாறு குறிப்பிட்டார்கள்:

"எவரொருவர் என்மீது வேண்டுமென்று பொய் கூறுகின்றாரோ, அவர் நரகில் தனக்கென ஓரிடத்தைத் தயார்படுத்திக் கொள்கிறார்."

(நஹ்ஜுல் பலாகா, குத்பா 210)

இதேபோன்ற கருத்துள்ள ஹதீஸ் ஒன்று ஸஹீஹ் புஹாரி, முதலாம் பாகத்தின் 28ம் பக்கத்தில் (நபிகளார் மீது அபாண்டம் சுமத்துவோர் பற்றிய அத்தியாயம்) வந்துள்ளது.

## 9. அஹ்லுல் பைத் இமாம்களின் வழிமுறைகள்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது கட்டளையின்படி, அவர்களது பரிசுத்தக் குடும்பத்தினரான அஹ்லுல் பைத் இமாம்கள் கூறிய ஹதீஸ்களையும் பின்பற்றி நடப்பது கடமையாகும் என நாம் நம்புகின்றோம். இதற்கான ஆதாரங்களாக பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

1. ஷீயா-சுன்னா இரு தரப்பினரும் அநேகமான கிரந்தங்களில் அனைவரிடமும் பிரபல்யமாகி மறுப்புக்கு இடமில்லாத (முதவாதிரான) ஹதீஸ் ஒன்று இக்கருத்தை தெளிவுபடுத்தியுள்ளது. ஸஹீஹ் திர்மதியில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் கூறியதாக வந்துள்ளதாவது:

> "மனிதர்களே! உங்களுக்கு மத்தியில் ஒன்றை விட்டுச் செல்கின்றேன். அதை நீங்கள் எடுத்து நடக்கும் காலமெல்லாம் வழிதவற மாட்டீர்கள். அது இறைவேதமும், எனது குடும்பத்தினரான அஹ்லுல் பைத்துமாகும்." (ஸஹீஹ் திர்மதி - பாக 5 - பக் 662 ஹதீஸ் 3786)

2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் வழித்தோன்றலாக வந்த இமாம்கள் அனைத்து ஹதீஸ்களையும் நபியவர்களிடமிருந்தே எடுத்துச் சொல்லி யிருக்கின்றார்கள். மேலும் அவர்கள்,

"நாங்கள் சொல்வது எல்லாம், நபிகளாரிடமிருந்து எங்களது தந்தையர்களுக்கும், அவர்களிடமிருந்து எமக்கும் கிடைத்தவையாகும்" என்று சொன்னார்கள்.

ஆக, உள்ளடக்கத்திலும் அறிவிப்பாளர் வரிசையிலும் மிக வலுவான திர்மிதியிலுள்ள மேற்படி ஹதீஸை அவதானிக்காது மிகச் சாதாரணமாக விட்டுவிட முடியுமா? எனவே தான், இது விடயத்தில் கூடுதல் அக்கறை காட்டப்பட்டிருப்பின் .ன்று முஸ்லிம்கள் எதிர் நோக்கியுள்ள அகீதா, பிக்ஹ், தப்ஸீர் முதலிய பல்வேறு துறைகளில் எழுந்துள்ள பிரச்சினைகள் நிச்சயமாக இருந்திருக்காது என்று நாம் உறுதியாக நம்புகின்றோம்.

அத்தியாயம் 4

# மறுமை வாழ்வு

## 1. மறுமை இன்றி வாழ்வில் அர்த்தமில்லை

மஆத் என்பது மறுமை நாள் பற்றிய நம்பிக்கையைக் குறிக்கின்றது. உலகில் வாழ்ந்த மனிதர்கள் அனைவரும் மறுமை நாளில் மீள உயிர்ப்பித்து எழுப்பப்படுவார்களென்றும், அவர்களது செயல்களனைத்தும் விசாரிக்கப்பட்டு, நல்லடியார் கள் சுவனத்திற்கும், பாவிகள் நரகிற்கும் அனுப்பப் படுவர் என்றும் நாம் நம்பிக்கை கொள்கிறோம்.

> "அல்லாஹ், அவனைத் தவிர வேறு இறைவனில்லை. அவன், நிச்சயமாக மறுமை நாளில் உங்களை ஒன்று சேர்ப்பான். அதில் சந்தேகமில்லை." (04: 87)
>
> "எவர் வரம்பு மீறி இவ்வுலக வாழ்க்கையைத் தேர்ந்தெடுத் துக் கொண்டாரோ, நிச்சயமாக அவர் ஒதுங்குமிடம் நரகமாகும். மேலும், எவர் தன் இறைவனின் சந்நிதியைப் பயந்து, மனோ இச்சையிலிருந்து தன்னைத் தடுத்துக் கொண்டாரோ, நிச்சயமாக அவர் ஒதுங்குமிடம் சுவனமாகும்." (80: 37-41)

இவ்வுலகமென்பது, முடிவற்ற நிலையான ஒரு வீட்டை அடைவதற்காக மனிதர்கள் கடந்து செல்லும் பாலமாக இருக்கின்றது என்பது எமது நம்பிக்கையாகும். வேறு

வார்த்தைகளில் சொல்வதானால் வேறொரு வீட்டிற்காக பயிர் விதைக்கப்படுகின்ற ஒரு விளைநிலமாகும்.

ஹஸ்ரத் அலீ அலைஹிஸ் ஸலாம் அவர்கள் இவ்வாறு சொன்னார்கள்:

"உலகத்தையே உண்மையாகக் கொண்டவருக்கு அது உண்மையின் இருப்பிடமாகும். அதனைப் பயன்படுத்தியவர்களுக்கு அது செல்வங்களைத் தருமிடமாகும். அதிலிருந்து கற்றுக் கொள்பவருக்கு அது படிப்பினை தரும் இடமாகும். அது இறைநேசர்களின் வழிபாட்டுத் தலமாகவும் மலக்குகளின் தொழும் இடமாகவும் வஹியின் இறங்கு தளமாகவும் அல்லாஹ்வுடைய நேசர்களின் சந்தையாகவும் இருக்கின்றது." (நஹ்ஜுல் பலாகா - மொழி *131*)

## 2. மறுமை பற்றிய ஆதாரங்கள்

மறுமை நாளென்பது நிச்சயமானது என்பதை நிறுவக் கூடிய ஆதாரங்கள் மிகத் தெளிவானவை என்பது நமது நம்பிக்கையாகும்.

*1.* படைப்பின் நோக்கமானது, மனிதன், இவ்வுலகில் பிறந்து பிரச்சினைகளுக்கு மத்தியில் சில நாட்கள் வாழ வேண்டும், அதன்பின் அழிந்து விடுவது என்ற குறுகிய போக்கைக் கொண்டதல்ல என்பதற்கு இவ்வாழ்வே போதுமான அத்தாட்சியாகும்.

> "உங்களை நாம் படைத்ததெல்லாம் வீணுக்காகத் தான் என்றும் நிச்சயமாக நீங்கள் எம்மிடம் மீளக் கொண்டு வரப்பட மாட்டீர்கள் என்றும் எண்ணிக் கொண்டீர்களா?" *(23: 115)*

இங்கு குறிப்பிடத்தக்க விசயம் யாதெனில் மஆத் இல்லையெனில், மனித வாழ்க்கையும், படைப்பும் வீணானதாகவும், அர்த்தமற்றதாகவும் போயிருக்கும் என்பதை இவ்வசனம் சுட்டிக் காட்டுகிறது.

2. இறைவனது நீதி அவசியமானது. இவ்வுலகில் நல்லவர்களும் தீயவர்களும் சம அந்தஸ்துப் பெற்றவர்களாக இருப்பதையும், சில வேளைகளில் நல்லவர்களை விட தீயவர்கள் அந்தஸ்தில் உயர்ந்தவர்களாக மாறிவிடுவதையும் அவதானிக்க

முடிகின்றது. ஆனால் நல்லோரும் தீயோரும் அவரவரது செயல்களுக்கான வெகுமதிகளைப் பெற்றுக் கொள்ளும் விதத்தில் அல்லாஹ்வினால் நீதியான கூலி வழங்கப்படுவது அவசிய மாகின்றது.

> "தீமைகளைச் சம்பாதித்துக் கொண்டவர்கள், விசுவாசம் கொண்டு நற்கருமங்களைச் செய்தவர்களைப் போன்று அவர்களையும் நாம் ஆக்கிவிடுவோம் என்று எண்ணிக் கொண்டார் களா? அவர்கள் உயிர் வாழ்வதும், மரணித்து விடுவதும் சமமே. அவர்கள் இதற்கு மாறாக தீர்ப்புச் செய்து கொண்டது மிகக் கெட்டதாகி விட்டது." (45: 21)

3. அல்லாஹ்வின் முடிவற்ற அன்பும் அருளும் மனிதன் மரணித்ததுடன் நிறைவு பெறுவதில்லை. அது நல்லவர்களுக்கு தொடர்ந்தும் இருக்க வேண்டும் என்பது அவசியமாகின்றது.

> "அவன், கருணையை தன் மீது கடமையாக்கிக் கொண்டிருக்கின்றான். நிச்சயமாக அவன் மறுமை நாளில் உங்களை ஒன்று சேர்ப்பான். அதில் சந்தேகமில்லை." (06: 12)

மறுமை நாள் தொடர்பில் சந்தேகம் கொண்டோரைப் பார்த்து அல்குர்ஆன் கூறுகின்றது, 'உங்களது ஆரம்பம் அல்லாஹ்விடமிருந்தே உருவானது. அவ்வாறிருக்க, மரணித்தவர்களை உயிர்ப்பிக்கும் அவனது மகாவல்லமையில் எவ்வாறு உங்களுக்கு சந்தேகம் எழுகின்றது? அவன் தான் ஆரம்பத்தில் உங்களை மண்ணிலிருந்து படைத்தான். பின்னர், உங்களை வேறொரு வாழ்வுக்காக மீட்டுகின்றான்.'

> "படைப்புகளை முதலாவதாகப் படைத்ததில் நாம் இயலாமலாகி விட்டோமா? அவ்வாறன்று. (இறந்தபின்) மீண்டும் படைப்பது பற்றி இவர்கள் சந்தேகத்தில் இருக்கின்றனர்." (50:15)

> "மேலும், அவன் தன்னுடைய படைப்பை மறந்து

> விட்டு ஓர் உதாரணத்தையும் நமக்காகக் கூறுகின்றான். 'எலும்புகளை, அவை மக்கிப் போன நிலையில் உயிரூட்டுபவன் யார்?' என்று அவன் கேட்கிறான். (நபியே!) நீர் கூறும். முதன் முதலில் அதனைப் படைத்தானே, அவனே அதை உயிர்ப்பிப்பான். அவன் ஒவ்வொரு படைப்பைப் பற்றியும் நன்கறிபவன்." (36: 78,79)

மனிதனது படைப்பு, வானம் பூமியைப் படைத்ததை விடவும் முக்கியமானதும் அற்புதமானதுமாகும். இப்பாரிய உலகத்தை பல ஆச்சரியங்களுடன் படைத்திருக்கும் இறைவன், மனிதன் மரணித்த பின்பும் அவனை உயிர்ப்பிப்ப தற்கும் சக்தியுள்ளவனாவான்.

> "நிச்சயமாக வானங்களையும் பூமியையும் படைத்த அல்லாஹ் அவற்றைப் படைத்ததால் சோர்வடைய வில்லையே. இவ்வாறே, மரணித்தோரை உயிர்ப்பிக் கவும் சக்தியுடை யவன் என்பதை அவர்கள் பார்க்க வில்லையா? ஆம், நிச்சயமாக அவன், அனைத்தின் மீதும் வல்லமை கொண்டவன்." (47: 33)

### 3. உடல் ரீதியான மஆத்

மறுமையில் ஆத்மா மாத்திரம் விசாரணைக்காகச் செல்வதில்லை. உடலும் உயிரும் இணைந்து சென்றே புதியதொரு வாழ்வை ஆரம்பிக்கின்றன. ஏனெனில், இவ்வுலகில் வாழ்ந்த காலங்களில் உடலும், உயிரும் சேர்ந்தே ஒரு விடயத்தைச் செய்தன. ஆதலால் அங்கு கிடைக்கும் நன்மை-தீமைகளும் இரண்டையுமே சென்றடைய வேண்டியது அவசியமாகும்.

குர்ஆனில் மஆதைத் தொடர்பு படுத்தி வந்துள்ள அநேகமான வசனங்களில், உடலும் இணைந்த மஆத் பற்றிய கருத்துகளே பொதிந்திருக்கின்றன. இறந்து போன எலும்புகளை எவ்வாறு புதியதொரு வாழ்வுக்குத் திருப்ப முடியுமென எதிரிகள் ஆச்சரியத்துடனும், சந்தேகத்துடனும் வினாவெழுப்பிக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு அல்குர்ஆன் இவ்வாறு பதிலளித்தது:

> "(நபியே!) நீர் சொல்லும், முதலில் அதைப் படைத்தவன் தான் அதனை மீண்டும் உயிர்ப்பிப்பான்." *(36: 79)*
> "மனிதன், அவனது உக்கிப் போன எலும்புகளை நாம் ஒன்று சேர்க்கமாட்டோம் என்று எண்ணுகின்றானா? ஆம், நாம் அவனது விரல்களின் நுனிகளைக் கூட சீர்படுத்த சக்தியுடையோராய் இருக்கின்றோம்." *(75: 3,4)*

இவ்வசனங்களும், இவை போன்ற வேறு பல வசனங்களும் உடலின் மஆதையே குறிப்பிட்டுச் சொல்லுகின்றன. "நீங்கள் உங்களது கப்றுகளிலிருந்து எழுப்பப்படுவீர்கள்" என்று கூறும் அல்குர்ஆன் வசனங்களும் கூட் இதனையே குறிப்பிடுகின்றன. *(36:51,52 54:07 70:43)*

இவை தவிர, அல்குர்ஆனின் வேறு பல வசனங்களும் உயிர், உடல் இணைந்த மஆதைப் பற்றி விபரிக்கின்றன.

## 4. ஆச்சரியமான மறு உலகம்

மரணத்தின் பின்னுள்ள மீளவுயிர்ப்பித்தல், விசாரணை, தீர்ப்பு, சுவனம், நரகம் முதலானவற்றை உள்ளடக்கிய மறுமை வாழ்வானது வரையறுக்கப்பட்ட இவ்வுலகில் நாம் புரிந்து கொள்ள முடிந்ததை விட மிக உயர்ந்ததும் சிறப்பானதும் ஆகும் என நாம் நம்புகின்றோம்.

> "எந்தவொரு ஆத்மாவும் அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டிருக்கும் கண்களின் குளிர்ச்சியை அறிய மாட்டாது." *(32: 17)*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் பிரபல்யமான ஹதீஸ் ஒன்றிலே வந்திருப்பதாவது:

> 'எனது நல்லடியார்களுக்கு எந்தக் கண்ணும் கண்டிராத, எந்தச் செவியும் கேட்டிராத, மனித எண்ணத்தில் என்றுமே தோன்றாத அருட் கொடைகளை ஏற்பாடு செய்து வைத்துள்ளேன் என்று அல்லாஹ் கூறுகின்றான்."

புஹாரி, முஸ்லிம் போன்ற ஹதீஸ் கலை அறிஞர்களும் தப்ரீஸீ, ஆலூஸீ, குர்துபி போன்ற பிரபலமான தப்ஸீர் கலை அறிஞர்களும் தங்களது நூற்களில் இதனைக் குறிப்பிட்டுள்ளார்கள்.

மனிதர்களின் இவ்வுலக வாழ்க்கையென்பது, தாயின் வயிற்றுக்குள் மட்டுப் படுத்தப் பட்ட சூழலில் உயிர்வாழும் சிசுவின் வாழ்வைப் போன்றதாகும். கற்பத்திலிருக்கும் சிசு, திறமை, சாதுரியம் என எத்தகைய இயல்புடையதாக இருப்பினும் வெளிப்புற உலகிலுள்ள சூரியன், சந்திரன், தென்றல், காற்று, தாவரங்கள், பசுந்தரைகள், கடலலைகள் போன்ற எதனையும் உணர்ந்து கொள்ளமாட்டாது. அதுபோலவே, மனிதனின் இவ்வுலக வாழ்க்கையில் மறுமை பற்றிய உண்மைகளை பூரணமாக அறிந்து கொள்வதென்பதும் சாத்தியமற்றதே. மனிதர்களாகிய நம்மைப் பொறுத்த வரையில் கியாமத் வாழ்வு என்பது கற்பத்திலுள்ள சிசுவுக்கு வெளியுலக வாழ்வு போன்றதாகும்.

## 5. செயல்களின் பட்டோலை

பட்டோலை என்பது மனிதர்களின் செயல்களை விபரிக்கும் ஒரு ஏடாகும். நல்ல அமல் செய்தோரின் ஏடு அவர்களது வலது கையிலும் பாவிகளின் ஏடு அவர்களது இடது கையிலும் வழங்கப்படும் என்பதாக நாம் நம்பிக்கை கொண்டுள்ளோம். தத்தமது செயல்களைப் பார்த்து நல்லடியார்கள் சந்தோஷப் படுவார்கள். பாவிகள் கைசேதப் படுவார்கள்.

> “ஆகவே, எவர் தனது பதிவேடு வலக்கையில் கொடுக்கப் பட்டாரோ, அவர் “வாருங்கள், எனது பதிவேட்டைப் படித்துப் பாருங்கள்” என மற்றவர் களிடம் கூறுவார். நிச்சய மாக நான் எனது கேள்வி கணக்கை சந்திப்பேன் என்று உறுதியாக எண்ணியிருந்தேன் என்றும் அவர் கூறுவார். ஆகவே, உயர்வான சுவனத்தில், திருப்தியான வாழ்வில் அவர் இருப்பார். மேலும், எவர் தனது

பதிவேடு இடக்கை யில் கொடுக்கப்பட்டாரோ, அவர் "எனது பதிவேடு கொடுக்கப்படாது இருந்திருக்க வேண்டுமே" எனக் கூறுவான்."
*(69:19-25)*

அந்தப் பதிவேடு எப்படியிருக்கும், அதில் பொதிந்துள்ள வற்றை எவரும் நிராகரிக்க முடியாதளவுக்கு எவ்வாறு அது எழுதப்பட்டிருக்கும் போன்ற விடயங்கள் மனிதர்களைப் பொறுத்த வரை தெளிவற்றவையாக இருக்கலாம். இது நியாயமானதே.
ஏனெனில், மறுமை நாளின் விசேடத் தன்மைகளின் ஒவ்வொரு பகுதியையும் மனிதர்கள் தெளிவாக அறிந்து கொள்வதென்பது சாத்தியமற்ற தாகும். அது பற்றிய பொதுவான அடிப்படை அறிவு மாத்திரம் அவர்களிடம் இருக்கின்றது.

## 6. மறுமை நாளின் சாட்சிகள்

மறுமை நாளில், மனிதர்கள் அனைவரது செயலுக்குமான முதன்மை சாட்சியாளனாக அல்லாஹ் இருப்பான். அத்தோடு, மனிதர்களின் உறுப்புகளான கை, கால், தோல் முதலானவையும் மனிதர்கள் நடந்து விளையாடும் பூமியும் இன்னும் இன்னோரன்ன அம்சங்களும் சாட்சிகளாக இருக்கும் என நாம் நம்புகின்றோம்..

"அன்றைய தினம் நாம் அவர்களின் வாய்களின் மீது முத்திரையிட்டு விடுவோம். அன்றியும், அவர்கள் சம்பாதித்துக் கொண்டிருந்தவை பற்றி அவர்களுடைய கைகள் நம்மிடம் பேசும், அவர்களது கால்களும் சாட்சி கூறும்." *(36:65)*
"அவர்கள் தங்களின் தோல்களிடம் எங்களுக்கு எதிராக ஏன் நீங்கள் சாட்சி கூறுகிறீர்கள் எனக் கேட்பார்கள். அதற்கு அவை, ஒவ்வொரு பொருளையும் பேசச் செய்தவனாகிய அல்லாஹ் தான் எங்களையும் பேசவைத்தான் என்று கூறும்." *(41:21)*

> "அந்த நாளில் பூமி தன் செய்திகளை அறிவிக்கும். ஏனெனில் நிச்சயமாக உமது இறைவன் அதற்கு இவ்வாறு செய்யுமாறு வஹி மூலம் அறிவித்திருக்கிறான்." *(99: 4-5)*

## 7. சிராத்தும் மீஸான் தராசும்

சிராத் எனும் பாலம், நன்மை-தீமைகளை நிறுக்கும் மீஸான் தராசு என்பனவும் மறுமையில் உள்ளதாக நாம் நம்புகின்றோம்.

சிராத் எனப்படுவது, நரகின் மேல் போடப்பட்டிருக்கும் ஒரு பாலமாகும். கண்டிப்பாக அனைவரும் அதனைக் கடந்தேயாக வேண்டும். உண்மையில் சுவனத்திற்குச் செல்லும் பாதை, நரகின் மேல் போடப்பட்டிருக்கின்றது.

> "இன்னும் உங்களில் எவரும் (சிராத் பாலமான) அதற்கு வரக்கூடியவராக அல்லாது இல்லை. உமது இரட்சகனிடம் இது உறுதியான ஒன்றாகி விட்டது. பின்னர், பயபக்தி உடையோராக இருந்தோரை ஈடேற்றுவோம். அநியாயக் காரர்களை முழந்தாளிட்ட வர்களாக அதில் விட்டு விடுவோம்." *(19:71-72)*

சிராத்தைக் கடப்பது இலகுவாக அமைவதோ அல்லது சிரமமாக அமைவதோ அவரவரது செயல்களின் அடிப்படையைப் பொறுத்தது என்பதாக ஹதீஸ்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

> "சிலர் அதை மின்னல் வேகத்திலும் சிலர் குதிரை வேகத்திலும் சிலர் தவழ்ந்தும் சிலர் நடந்தும் சிலர் அதைப் பிடித்துத் தொங்கியவர்களாகவும் அதனைக் கடப்பார்கள். அப்போது, நரகம் அவர்களில் சிலரை எடுத்துக் கொள்ளும். சிலரை விட்டு விடும்."

இந்த ஹதீஸ் சிறு மாற்றங்களுடன் அஹ்லுல் ஷீயா மற்றும் அஹ்லுல் சுன்னா கிரந்தங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. உதாரணம்: கன்சுல் உம்மால்

ஹதீஸ் 39036, தப்ஸீர் குர்துபீ பாக 6 - சூரா மர்யம் - வசனம் 71க்கான விளக்கத்துடன், செய்கு சதூகின் ஆமாலீ எனும் நூல் மற்றும் ஸஹீஹ் புஹாரீ பாக 8 - பக் 146 சிராத் நரகின் மீதான பாலம் எனும் தலைப்பின் கீழும் வந்துள்ளது.

மீஸான் என்பது, அதன் பெயரிலிருந்து விளங்கப்படுவது போன்று மனிதர்களது நன்மை-தீமைகளை அளவிடுவதற்காகப் பயன்படுத்தப்படும் ஒரு தராசு ஆகும். அந்நாளில் ஒவ்வொருவரது நன்மை-தீமைகளும் துல்லியமாகக் கணக்கிடப்பட்டு ஒவவொன்றின் அளவுக்கேற்ப கூலியும் வழங்கப்படும்.

> "மறுமை நாளில் நீதமான தராசுகளை நாம் வைப்போம். எந்தவோர் ஆத்மாவும் சிறிதளவும் அநியாயம் செய்யப்பட மாட்டாது. ஒரு கடுகின் வித்தளவு அது இருந்த போதிலும் அதனையும் நாம் கொண்டு வருவோம். கணக்கெடுப்பவர் களில் நமக்கு நாமே போதுமாகும்." (21:47)
> "ஆகவே, எவருடைய நன்மையின் எடை கனத்ததோ, அவர் திருப்தியுள்ள வாழ்வில் இருப்பார். எவருடைய எடை இலேசானதோ, அவர் தங்குமிடம் நரகம் தான்." (102:6-9)

மனிதர்கள் இவ்வுலகில் புரிகின்ற செயல்களின் தன்மை தான் மறுமையில் அவர்களது வெற்றி தோல்வியை நிர்ணயிக் கின்றது. அன்றைய தினம், எதிர்பார்ப்புகளும் உபதேசங்களும் எவ்வித பயனுமளிக்க மாட்டாது. பரிசுத்தத் தன்மையும் தக்வாவும் இன்றி எதற்கும் பெறுமதி கிடையாது.

> "ஒவ்வோர் ஆத்மாவும், தான் சம்பாதித்தவற்று க்குப் பிணையாக ஆக்கப்பட்டுள்ளது." (74: 38)

சிராத், மீஸான் பற்றிய முழு விபரங்களையும் தெளிவாக அறிந்து கொள்வதென்பது சாத்தியமற்ற தாகும். ஏனெனில், இவ்வுலகப் பொருட்களுடனான ஒப்புநோக்கின் அடிப்படையிலான, மட்டுப்படுத்தப்பட்ட அறிவே நம்மிடம் உள்ளது.

## 8. மறுமை நாளில் ஷபாஅத்

மறுமை நாளில் நபிமார்களும் பரிசுத்த இமாம்களும் இறைநேசர்களும் அல்லாஹ்வின் அனுமதி யுடன் சில பாவிகளுக்குப் பரிந்துரை செய்வார்கள் என்றும் அவ்வாறு பரிந்துரை செய்யப் படுவோர், அல்லாஹ்வின் பாவமன்னிப்பைப் பெற்று, அவனது அருளுக்குத் தகுதியுள்ளவர்களாக மாறி விடுவர் என்றும் நாம் நம்புகின்றோம்.

அல்லாஹ்வுடனும் அவனது நேசர்களுடனுமான தம் தொடர்பைத் துண்டிக்காதவர்களுக்கே ஷபாஅத் பெறும் பாக்கியம் உண்டு. இதனடிப்படையில், ஷபாஅத் செய்யப்படுவதற்கான தகுதி பெறுவதற்கும் சில நிபந்தனைகள் இருக்கின்றன. அவை, மனிதர் களது செயற்பாடுகளுடனும் எண்ணங்களுடனும் தொடர்புடை யவையாகும்.

> "அவன் பொருந்திக் கொண்டவரைத் தவிர, (வேறெவருக்கும்) இவர்கள் பரிந்துரை செய்ய மாட்டார்கள்." *(21:28)*

ஷபாஅத் என்பது, ஏற்கனவே நாம் குறிப்பிட்டது போல நல்வழியில் மனிதர்களைப் பயிற்றுவிக்கும் ஒரு வழிமுறையாகும். அவர்கள் பாவத்தில் மூழ்குவதையும், இறைநேசர்களுடனான தொடர்புகளை துண்டிப்பதையும் தடுக்கின்ற ஓர் உத்தியாகும். அவர்களது உள்ளங்களில் எழுகின்ற தீய உணர்வுகளைக் கட்டுப்படுத்தி, நல்வழியின் பால் அவர்களைத் திசை திருப்ப முயற்சிக் கின்ற, தவறுகளில் விழுகின்ற போது தொடர்ந்தும் அதில் மூழ்காமல் மீண்டு வர அவரைத் தூண்டுகின்ற சாதனமாகும்.

மறுமை நாளில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் "ஷபாஅதுல் குப்ரா" எனும் மாபெரும் பரிந்துரை செய்வார்கள். அவர்களை யடுத்து ஏனைய நபிமார்களும் பரிசுத்த இமாம்களும் ஏன் உலமாக் கள், ஷுஹதாக்கள், மு..மின்கள், ஆரிபீன்கள்

மற்றும் அல்குர்ஆன், சாலிஹான நல்லமல்கள் என்பனவும் மனிதர்களுக்கு பரிந்துரை செய்ய முடியும்.

இமாம் ஜ'.பர் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் குறிப்பிடுகின்றார்கள்: "முந்தியோர் பிந்தியோர்களில் எவரும், மறுமை நாளில் நபிகளாரின் ஷபாஅத்து தேவையற்றவர்களாக இல்லை."

(பிஹாருல் அன்வார் - பாக.8, பக்.42)

மேலும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி கூறினார்கள்:

> "மறுமையில், ஷபாஅத்து செய்யக் கூடியவை ஐந்து. அல்குர்ஆன், உறவினர்களை சேர்ந்து நடத்தல், அமானத், உங்களது நபி மற்றும் உங்களது நபியின் குடும்பத்தினர்."
>
> (கன்சுல் உம்மால் பாக 14 பக் 390 ஹதீஸ் 39041)

இமாம் ஜ'.பர் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் மேலும் குறிப்பிட்டுள்ளதாவது: "மறுமை நாளில் ஆலிமும் (அறிஞர்) ஆபிதும் (வணக்கவாளி) அல்லாஹ்வின் முன் கொண்டு வரப்படுவார்கள். ஆபிதைப் பார்த்து நீர் சுவர்க்கம் செல்லலாம் என அல்லாஹ் அனுமதி வழங்குவான். ஆலிமிடம், "நீர் சற்று நில்லும், மக்களை நீர் சிறப்பாக பயிற்றுவித் தமையின் பொருட்டால் அவர்களுக்கு பரிந்துரை செய்யும்" என்று அல்லாஹ் கூறுவான்."

(பிஹாருல் அன்வார் -பாக 8 - பக் 56 - ஹதீஸ் 66)

இந்த ஹதீஸ் ஷபாஅத் செய்வதன் தத்துவத்தை மிக அழகாகவும் தெளிவாகவும் உணர்த்துகின்றது.

### 9. ஆலமுல் பர்ஸக்

இவ்வுலகிற்கும் மறுவுலகிற்கும் இடையிலே பிறிதோர் உலகம் இருக்கின்றது. ஆலமுல் பர்ஸஹ் என அழைக்கப்படும் இவ்வுலகில் தான், மரணித்த அனைவரது உயிர்களும் மறுமை வரை வைக்கப் பட்டிருக்கும் என்று நாங்களும் நம்புகின்றோம்.

> "இன்னும் அவர்கள் மரணித்ததிலிருந்து எழுப்பப்படும் வரை அவர்களுக்குப் பின்னால் பர்ஸக் இருக்கின்றது." (23:100)

ஆலமுல் பர்ஸஹைப் பற்றிய அறிவும் மிகவும் மட்டுப் படுத்தப் பட்டதாகும். எனினும், அங்கு ஷுஹதாக்கள் போன்ற நல்லடியார்களது ஆத்மாக்கள் உயர்ந்த அந்தஸ்தில் வைக்கப்பட்டு, பல நி.:.மத்துகளை அனுபவித்த வண்ணம் இருப்பார்கள் என்று மட்டும் அறிந்து வைத்துள்ளோம்.

> "ஒரு போதும் நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டவர்களை இறந்து விட்டவர்களென நினைக் காதீர்கள். அவர்கள் உயிருள்ளவர்கள் தான். இன்னும் அவர்கள் தமது இறைவ னிடத்தில் உணவளிக்கப் படுகின்றனர்." (03: 169)

அநியாயக்காரர்கள், அக்கிரமக்காரர்களது ஆத்மா க்கள் அங்கு வேதனைக்கு உட்படுத்தப்படுகின்றன. அல்குர்ஆன் பிர்அவ்னையும் அவனது கூட்டத்தாரையும் பற்றி பின்வருமாறு குறிப்பிடுகிறது.

> "நரக நெருப்பின் மீது காலையிலும் மாலையிலும் அவர்கள் எடுத்துக் காட்டப் படுவார்கள். மேலும், மறுமை நாள் நிலைபெற்று விடும் நாளில் பிர்அவ்னைச் சார்ந் தோரை கடினமான வேதனையில் புகுத்துங்கள் எனக் கூறப்படும்." (40: 46)

ஆனால், அதிக பாவமுமின்றி அதிக நன்மையுமின்றி நடுநிலையில் உள்ளவர்கள், இன்பம் சுகிப்பதோ, வேதனைக்கு உள்ளாக்கப்படுவதோ இன்றி தூக்கத்திற்கு ஒப்பான ஒரு நிலையில் மறுமை வரை வைக்கப்பட்டிருப்பார்கள், மறுமை நாள் ஏற்படும் போது கண்விழிப்பார்கள் எனக் கூறப்படுகின்றது.

> "மேலும், மறுமை நாள் நிலை பெறும் போது, குற்றவாளிகள் 'இங்கு கொஞ்ச நேரமே தவிர நாம் தங்கியிருக்கவில்லை'யென சத்தியம் செய்வார்கள். அறிவும், ஈமானும் கொடுக்கப்

பட்டிருந்தவர்கள், 'அல்லாஹ்வின் ஏட்டில் உள்ளவாறு நீங்கள் உயிர் பெற்றெழும் இந்நாள் வரை திட்டமாக தங்கியிருந்தீர்கள். இது தான் எழுப்பப்படும் நாள். எனினும், நிச்சயமாக நீங்கள் இதனை அறிந்து கொள்ளாதவர்களாகவே இருந்தீர்கள்' என்று கூறுவார்கள். (30: 55-56)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் இது பற்றி இவ்வாறு கூறினார்கள்: "கப்று, சுவனத்துச் சோலைகளில் ஒரு சோலை யாகும். அல்லது நரகத்துப் படுகுழிகளில் ஒரு படுகுழியாகும்." (திர்மிதி - பாக.4 -கிதாப் ஸிபத்துல் கியாமா பிரிவு.26 - ஹதீஸ் 2460)

### 10. ஆன்மீக - பௌதீக ரீதியான கூலி

இம்மையில் செய்த செயல்களுக்காக மறுமையில் வழங்கப்படும் கூலிகள் ஆன்மீக மற்றும் பௌதீக பரிமாணங்கள் கொண்டவை. ஏனெனில், மஆத் என்பது ஆத்மா, சரீரம் ஆகிய இரு அம்சங்களுடனும் தொடர்புபட்ட தாகும். அதாவது, நல்லடியார் களுக்கு அவர்களது இறையச்சத்துக்கான பரிசுகளாக நீரோடைகள் நிறைந்த சுவர்க்கத்துப் பூஞ்சோலைகள், நிரந்தரமாகக் கிடைக்கும் கனி வர்க்கங்கள், மர நிழல்கள், பரிசுத்த மங்கையர் முதலான பல்வேறு இன்ப சுகங்கள் கூறப்படுகின்றன. இவையனைத்தும் உடலுக்கும் புலனுக்கும் இன்பம் தரக்கூடிய பௌதீக ரீதியான கூலியாகும். நரகத்தில் வழங்கப்படும் பல்வேறு உடல் ரீதியான தண்டனைகளும் இவ்வகையைச் சேர்ந்தவையே.

இவை தவிர, நல்லடியார்களுக்கு மறுமையில் அல்லாஹ்வை அறிதல், பின் அவனது சந்நிதானத்தில் அவனை நெருங்கியிருத்தல் முதலான பல்வேறு சுகங்களும் கிடைக்கின்றன. இவையனைத்தும் ஆத்மீக ரீதியான பேரின்பங்களாகும். சுவர்க்கத் தில் வழங்கப்படுகின்ற பௌதீக பயன்பாடுகள் தொடர்பாக கருத்துரைக்கும் அல்குர்ஆன், ஆன்மீக பயன்பாடுகள் தொடர்பாகவும் குறிப்பிட்டுச் சொல்கின்றது:

"இன்னும் அல்லாஹ்வின் திருப் பொருத்தம் தான் மிகப் பெரியது. அது மகத்தான வெற்றியாகும்." *(09: 72)*

ஓர் அடியானுக்கு அல்லாஹ்வின் திருப் பொருத்தம் கிடைத்து, அவனது அருட்பார்வையின் கீழ் இருப்பதை விட சிறந்த இன்பம் வேறேது இருக்க முடியும்? இமாம் அலீ இப்னு ஹுஸைன் அலைஹிஸ் ஸலாம் றிவாயத் செய்யும் ஒரு ஹதீஸில் குறிப்பிடப்படுவதாவது:

அல்லாஹ் அவர்களுக்குக் கூறுவான், "உங்களை நான் பொருந்திக் கொண்டதும், உங்கள் மீது நான் கொண்டிருக் கும் அன்பும் உங்களுக்கு வழங்கப்பட்ட, நீங்கள் அனுபவித்துக் கொண்டிரு க்கும் எல்லா சுகண்டிகளை விடவும் சிறந்ததும் மேலானதாகும்."
(தப்ஸீர் அய்யாஸ் -சூரா தௌபா, வசனம் 78)

அல்லாஹ்வின் அன்பும், திருப்தியுமே ஓர் அடியானுக்குக் கிடைக்கின்ற மிகப் பெரிய வெற்றியும் இன்பமும் ஆகும். அல்குர்ஆன் கூறுவதாவது:
"அமைதியடைந்த ஆத்மாவே! நீ உன் இரட்சகன் பக்கம் அவனைத் திருப்திப்படுத்திய நிலையிலும், அவனிடம் பொருந்திக் கொள்ளப்பட்ட நிலையிலும் மீள்வாயாக. எனவே, நீ எனது அடியார்களில் பிரவேசிப்பாயாக. இன்னும் எனது சுவனத்திலும் நுழைந்து விடுவாயாக."
*(89:27-30)*

அத்தியாயம் 5

# இமாமத்

## 1. எப்போதும் ஒரு வழிகாட்டி வேண்டும்

மனிதர்களுக்கு நேர்வழி காட்டுவதற்காக காலத்திற்குக் காலம் நபிமார்களை அனுப்புவது இறைஞானத்தின் பிரகாரம் அவசியமாக இருந்தது போலவே, அவர்களுக்குப் பிறகு இறை ஞானத்தைப் போதித்து மக்களை அல்லாஹ்வின் பாதையிலும் அவனது தூதரின் பாதையிலும் அழைப்பதற்காகவும் எவ்வித மாற்றங்களுக்கும் அனுமதிக்காது மார்க்கத்தைப் பாதுகாப்பதற் காகவும் காலத்திற்குக் காலம் ஏற்படுகின்ற புதிய தேவைகளுக்கு தீர்வுகளை வழங்குவ தற்காகவும் உலகில் எப்போதும் ஒரு வழிகாட்டி -இமாம் இருக்க வேண்டும் என்பதையும் இறை ஞானம் வலியுறுத்துகிறது.

அவ்வாறில்லையெனில், மனித வாழ்க்கையின் நோக்கமான பரிபூரணத்துவத்தை அடைந்து கொள்வதில் பின்னடைவுக்குட்பட வேண்டிய நிலை மனிதர்களுக்கு ஏற்படும். இதனால் தான், திருநபி -ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி- அவர்களுக்குப் பிறகுள்ள ஒவ்வொரு காலத்திலும் ஓர் இமாம் இருக்க வேண்டியது அவசியம் என நாம் நம்புகின்றோம்.

> "ஈமான் கொண்டவர்களே! நீங்கள் இறைவனைப் பயந்து கொள்ளுங்கள். இன்னும் உண்மையா ளர்களுடன் இருந்து கொள்ளுங்கள். *(09:119)*

இவ்வசனம் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மாத்திரம் உரியதல்ல. உடனிருத்தல் என்பது, உண்மையாளர்க ளுடன் மாத்திரம் தான் என்ற நிபந்தனையுடன் வரையறுக்கப் பட்டுள்ளது. இது, எல்லாக் காலத்திலும் ஒரு பரிசுத்த இமாம் இருக்க வேண்டும் என்பதையும், அனைவரும் அவரையே பின்பற்ற வேண்டும் என்பதையும் எமக்கு உணர்த்துகின்றது. ஷியா-சுன்னா குர்ஆன் விரிவுரையாளர்கள் பலரும் இதே கருத்தையே முன்வைக்கின்றனர்.

இமாம் பஹ்ருர் ராஸீ, தனது பரவலான ஆய்வின் பின் இவ்வாறு குறிப்பிடுகிறார்:

"ஒவ்வொரு மனிதனும் பாவம் செய்யக் கூடியவன். இதனால், பாவங்களை விட்டும் தூய்மையாக்கப் பட்டவரையே பின்பற்றுவது எம் அனைவர் மீதும் கடமையாகும். அல்லாஹ் வினால், அவர்கள் குர்ஆனில் "சாதிகீன்கள்" என்று குறிப்பிடப் படுகின்றனர். எனவே, என்றும் பரிசுத்தமுடைய வர்களுடன் இருப்பதே அனைவர் மீதும் கடமையாகும். ஏனெனில், பாவங்களை மேற்கொள்கின்ற சாத்தியமுள்ள நாம் பாவம் செய்யாதவரையே வழிகாட்டியாகக் கொள்ள வேண்டும். மேலும் இவ்வசனம், குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமல்லாமல், சகல காலங் களுக்கும் உரியதாகும். ஆகவே தான், இவ்வசனம் ஒவ்வொரு காலத்திலும் பாவங்களை விட்டும் பரிசுத்தமடைந்த இமாம் ஒருவர் இருப்பார் என்பதைக் குறிக்கின்றது." (தப்ஸீர் கபீர், பாக.16, பக்.221)

## 2. இமாமத்தின் உண்மை நிலை

இமாமத் எனப்படுவது, வெறுமனே ஆட்சி செய்வதற்காக எடுத்துக் கொள்ளப்படும் ஒரு பதவியல்ல. மாறாக இது ஆன்மீகம் சம்பந்தமான ஓர் உயர் பதவியாகும். ஓர் இமாம், இஸ்லாமிய ஆட்சிக்குத் தலைவராக இருப்பதுடன், இம்மை-மறுமை விடயங்களில் மக்களுக்கு நேர்வழி காட்டுவதை தன் தோளில் சுமந்துள்ள பொறுப்பாளராகவும் விளங்குகின்றார். மேலும், பெருமானார் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள்

கொண்டு வந்த மார்க்கத்தைப் பாதுகாத்து, நபியவர்கள் கொண்டிருந்த நோக்கங்களையும் அவர் நிலை நிறுத்துவார்.

இமாமத் எனும் இந்த உயரிய அந்தஸ்து, நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு, அவர்களது நபித்துவத்தின் பின் பல சோதனைகளில் அவர்கள் சித்தியடைந்ததன் பிறகு வழங்கப்பட்ட கண்ணியமாகும். இப்பதவி வழங்கப்பட்ட சமயத்தில், அதனை தமது பரம்பரையினருக்கும் தருமாறு இப்ராஹீம் நபியவர்கள் வேண்டிய போது, அநியாயக்காரர்களை இது ஒரு போதும் சென்றடையாதென அவர்களுக்குக் கூறப்பட்டது.

> "இன்னும், இப்ராஹீமை, அவரது இரட்சகன் பல கட்டளைகளைக் கொண்டு சோதித்த சமயத்தில், அவற்றை அவர் நிறைவு செய்தார் என்பதை நினைவு கூர்வீராக. நிச்சயமாக, மனிதர்களுக்கு நான் உம்மை இமாமாக ஆக்குகின்றேன் என அல்லாஹ் கூறினான். அதற்கு அவர், என்னுடைய சந்ததியிலிருந்தும் (இமாம்களை ஆக்குவாயா?) எனக் கேட்டார். அதற்கு இறைவன், அநியாயக் காரர்களை எனது வாக்குறுதி சேராது எனக் கூறினான்." *(02: 124)*

இத்தகைய பதவியும் அந்தஸ்தும் வெளிப்படையான ஆட்சியைக் குறிப்பதல்ல. அது அகநிலை சார்ந்த ஒரு சிறப்பம்சமாக அமைந்திருக் கின்றது. மேலும், மேற்கூறியது போன்று இமாமத் விளங்கப்படுத்தப் படாவிட்டால், இவ்வசனம் தெளிவான தொரு விளக்கத்தையும் கொண்டிராது.

உலுல் அஸ்ம்களான சகல நபிமார்களும் இவ்(இமாமத்) அந்தஸ்து உடையவர்களாக இருந்தனர் என்று நாம் நம்புகின் றோம்.. அன்னோர் தமது தூதைப் பிரசாரம் செய்து, செயல் ரீதியிலே மக்களுக்கு அதை எடுத்துக் காட்டினர். அவர்கள் ஆன்மீக-இலௌகீக ரீதியிலும், உட்புற-வெளிப்புற விடயங்களிலும் மக்களுக்கு வழிகாட்டிகளாகத் திகழ்ந்தனர். குறிப்பாக, பெருமா னார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி

வஆலிஹி அவர்கள், தமது நபித்துவத்தின் ஆரம்ப காலத்திலிருந்தே இவ் அந்தஸ்தைக் கொண்டிருந்தார்கள். அவர்களது பணி இறைகட்ட ளைகளைப் பரப்புவதில் மாத்திரம் சுருங்கி விடுவதில்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்குப் பின்னர், இந்த இமாமத் பணி, அவர்களது சந்ததியினரில் தோன்றிய பன்னிரண்டு பரிசுத்த மனிதர்களுக்கு வழங்கப்பட்டது என நாம் நம்புகின்றோம்.

இமாமத் எனும் இவ்வுயர் பதவியை அடைவதற்கு முக்கிய நிபந்தனைகள் பல உள்ளன. அவர், முழுமையான இறையச்சம் கொண்டவராகவும் எவ்வித பாவமும் செய்யாத வராகவும் அறிவிலும் இஸ்லாமிய சட்டதிட்டங்கள் பற்றிய தெளிவிலும் பூரணத்துவமுடையவராகவும் இருப்பதுடன், மனிதர்க ளையும் அவர்களது கால - இட தேவை நிலைகளை யும் உணர்ந்திருப்பதும் அவசியமாகும்.

### 3. இமாம்கள் பாவத்தில் இருந்து பரிசுத்தமானவர்கள்

இமாம்கள், பாவம் செய்வதிலிருந்தும் தவறிழைப்பதில் இருந்தும் பரிசுத்தமானவர்களாக இருப்பது இது பற்றிய எமது நம்பிக்கையின் முக்கியமான அம்சமாகும். ஏனெனில், மேலே எடுத்தாளப்பட்ட குர்ஆன் வசனத்தில் குறிப்பிடப்பட்டது ஒரு புறமிருக்க, அவர்கள் பாவமிழைப்போராக இருப்பின், மக்கள் அவர்கள் மீது நம்பிக்கையிழந்து விடுவர். அவர்களிடமிருந்து மார்க்கத்தின் அடிப்படைகள் மற்றும் பிரிவுகள் பற்றிய அறிவைக் கற்றுக் கொள்ள அது தடையாகவும் அமையும். இதனால் தான், இமாம்கள் பரிசுத்தமானவர்களாக இருப்பதோடு, அவர்களது சொல், செயல், அங்கீகாரம் முதலானவை மார்க்கத்தின் ஆதாரங்க ளென வலியுறுத்தப் பட்டுள்ளது.

### 4. இமாம்கள் மார்க்கத்தின் பாதுகாவலர்கள்

இமாம்கள், ஒருபோதும் புதிய மார்க்கத்தை அறிமுகப் படுத்தவோ, புதிய சட்டதிட்டங்களை உருவாக்கவோ

மாட்டார்கள். மாறாக, மக்களிடையே தோன்றுகின்ற பிரச்சினை களுக்கு அல்குர்ஆன் மற்றும் நபியவர்களின் ஸுன்னா என்பவற்றை ஆதாரமாகக் கொண்டு தீர்ப்பும் வழிகாட்டலும் வழங்குவார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் கொண்டு வந்த மார்க்கத்தைப் பாதுகாப்பது, அவர்களது முக்கிய பணிகளில் ஒன்றாகும். அத்துடன், அம் மார்க்கத்தை மக்களுக்கு போதிப்பதும் நேர்வழியின் பால் மக்களுக்கு அழைப்பு விடுப்பதும் அவர்களது கடமையாகும்.

## 5. பரிபூரண அறிவுள்ளோர்

இமாம்கள், இஸ்லாமிய சட்டதிட்டங்களை தெளிவுபடுத்துவதற்கும், அல்குர்ஆனின் சரியான பொருளை விளங்கப்படுத்துவதற்கும் பரிபூரண அறிவைக் கொண்டவர் களாக இருக்க வேண்டும். அவர்களுடைய அறிவும், ஞானமும் அல்லாஹ்விடம் இருந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்கு வழங்கப்பட்டு, நபியவர்களிடமிருந்து இமாம்களுக்கு கொடுக்கப் பட்டதாகும். அறிவு விடயத்தில் இத்தகைய பூரணத்துவத்துடன் இருக்கின்ற போதே, அவர்கள் மனிதர்களின் நம்பகத்தன்மைக்கு உரியவர்களாக ஆகின்றனர். அவர்களது வழிகாட்டலை தமது வாழ்க்கை நெறிப்படுத்தலுக்காக ஏற்றுக் கொள்ளவும் மனிதர்கள் முன்வருவர்.

## 6. இமாமை நியமிப்பது யார்?

இமாம் யார் எனக் கூறும் நிர்ணய விசயம் இறைவனால் தெளிவாகக் கூறப்பட்டிருக்க வேண்டியது அவசியமாகும். அதாவது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்குப் பின்னால் வரக்கூடிய ஒவ்வொரு இமாமும் அல்லாஹ்வின் புறமிருந்து, நபி மூலம் அறிமுகப்படுத்தப்படல் வேண்டும் என நாம் நம்புகின்றோம். இது நபி இப்ராஹீமுக்கு 'நாம் உம்மை

மக்களுக்கு இமாமாக ஆக்கினோம்' என்று கூறுவதை ஒத்ததாகும்.

அத்தோடு, இறையச்சத்தில் உச்சநிலையை அடைந்தவர் களாகவும், ஒரு விடயத்தில் பிழையோ, தவறோ செய்ய முடியாத அறிவைப் பெற்றவர்களாகவும் இமாம்கள் இருக்க வேண்டும். அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் பின்னால் இமாம்களே அறிஞர்கள் என்ற வகையில், சமகால மக்கள் அனைவரிலும் உயர்ந்த அறிவுள்ளவர்களாகத் திகழ்வார்கள். இதனடிப்படையில், பரிசுத்த இமாம்கள் தலைமைத்துவத்திற்கு தெரிவு செய்யப்படுவ தென்பது, மனிதர்கள் மூலமாக அல்லாமல், அல்லாஹ்வின் மூலமே இடம்பெறுகின்றது என்பது நமது உறுதியான கோட்பாடாகும்.

## 7. இமாம்கள் நிர்ணயிக்கப்படல்

பெருமானார் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், தமக்குப் பின்னால் வரக் கூடிய இமாம்களைப் பற்றிய தகவல்களை உலகுக்கு வழங்கியுள்ளார்கள். 'தகலைன்' எனும் பிரபல்யமான ஹதீஸில் இதுபற்றி நபியவர்கள் விளக்கமளித் துள்ளார்கள்.

ஸஹீஹ் முஸ்லிமிலே குறிப்பிடப்பட்டிருப்பதாவது:

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையிலுள்ள 'ஹும்' எனும் இடத்தில், எழுந்து குத்பா பிரசங்கம் நிகழ்த்தி விட்டுச் சொன்னார்கள்:

"நான் உங்களிடமிருந்து விடைபெறும் நாள் நெருங்கி விட்டது. இதனால், உங்களுக்கு மத்தியில் பெறுமதி மிக்க இரண்டு பொக்கிஷங்களை விட்டுச் செல்கின்றேன். அவற்றில் முதலாவது- நேர்வழியும் ஒளியும் கொண்டுள்ள இறைவேதம். மற்றையது- எனது குடும்பத்தினரான அஹ்லுல் பைத்தினர். எனது குடும்பத்தார் விடயத்தில் உங்களுக்கு அல்லாஹ்வை ஞாபகமூட்டுகின்றேன்." இதை மூன்று முறை

குறிப்பிட்டுச் சொன்னார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் - பாக 4 - பக் 1873)

இதே பொருள்பட ஸஹீஹ் திர்மிதியிலும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. "நீங்கள் இவற்றைப் பின்பற்றும் காலமெல்லாம் வழிதவற மாட்டீர்கள்."

(திர்மிதீ - பாகம் 5 - பக் 662)

இந்த ஹதீஸ் சுனன் தாரமீயிலும் (பாக 2 - பக் 432), கஸாயிஸ் நஸயீயிலும் (பக் 20), முஸ்னத் அஹ்மதிலும் (பாக 5 - பக் 182) மற்றும் அதிகமான இஸ்லாமிய கிரந்தங்களிலும் பதிவு செய்யப்பட்டிருக்கின்றது. இது முதவாதிரான (மறுப்புக் கிடமின்றி அனைவரிடத்திலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட) ஹதீஸாகும். எந்தவொரு முஸ்லிமும் இதனை நிராகரிக்க முடியாது.

இந்த ஹதீஸை நபியவர்கள், ஓரிடத்தில் மாத்திரம் கூறவில்லை. பல இடங்களில், பல சந்தர்ப்பங்களில் குறிப்பிட்டுள்ளார்கள் என்பதிலிருந்து இதன் முக்கியத்துவத்தை உணர முடிகின்றது.

ஆனால், அல்குர்ஆனுக்கு அடுத்ததான இவ் உயர் நிலையை நபிகளாருடைய குடும்பத்தினர் அனைவருமே பெற்றுக் கொள்வதென்பது சாத்தியமற்றதும் நடைபெற்ற நிகழ்வுகளின் அடிப்படையில் புறம்பானதுமாகும். எனவே, இச்சிறப்பு, நபிகளாருடைய குடும்பத்தில் தோன்றி, பாவங்களை விட்டும் பரிசுத்த மாக்கப்பட்டவர்களாக இருந்த இமாம்களையே சாரக்கூடியதாக இருக்கின்றது.

(சில பலவீனமான ஹதீஸ்களில், அஹ்லுல் பைத் என்பதற்குப் பதிலாக 'சுன்னத்தீ'-எனது வழிமுறை- என்று குறிப்பிடப் பட்டு வந்துள்ளது.)

மேலும், ஸஹீஹ் புஹாரி, ஸஹீஹ் முஸ்லிம், சுனன் அபீதாவுத், முஸ்னத் அஹமத் போன்ற பிரபல்யம் வாய்ந்த ஹதீஸ் கிரந்தங்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஒரு ஹதீஸ் பின்வருமாறு: "மறுமை நாள் வரும் வரை அல்லது குறைஷிகளைச் சேர்ந்த பன்னிரண்டு கலீபாக்கள் உங்கள் மீது வரும் வரை இந்த மார்க்கம் நிலைபெற்றிருக்கும்." (புஹாரி - பாக 3 - பக் 101,

திர்மிதீ - பாக 4 - பக் 50, அபூதாவுத் - பாக 4 - கிதாபுல் மஹ்தி)

இமாமிய்யாக்களுடைய அகீதாவிலே, பெயர் குறிப்பிடப் பட்டுள்ள பன்னிரண்டு இமாம்கள் பற்றிய கோட்பாட்டைத் தவிர, இந்த ஹதீஸுக்கு ஏற்றுக் கொள்ளக் கூடிய வேறொரு விளக்கத் தைக் கொடுக்க முடியாது.

## 8. இமாம் அலீயை நபிகளார் நியமித்தார்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், ஹஸ்ரத் அலீ அலைஹிஸ் ஸலாம் அவர்களை தமது பிரதிநிதியென இறை கட்டளையின் பிரகாரம் பலதடவைகளில் பிரகடனப் படுத்தியிருக் கின்றார்கள் என நாம் நம்புகின்றோம். அவற்றில் சில:

நபியவர்கள், தமது இறுதி ஹஜ்ஜை முடித்து விட்டு வந்து கொண்டிருக்கும் சந்தர்ப்பத்தில், கதீர்ஹும் எனுமிடத்தில் பல்லாயிரக்கணக்கான நபித்தோழர்களுக்கு மத்தியில் ஒரு பிரசங்கம் செய்தார்கள். அப்போது சொன்னார்கள்:

"மனிதர்களே! நான் உங்களை விடவும் உயர்ந்தவனில்லையா?" என்று வினவிய போது, அவர்கள் அனைவரும் "ஆம்" என்றனர். பின்பு சொன்னார்கள், "எனவே, எவருக்கெல்லாம் நான் தலைவராக இருந்தேனோ, அவர்களுக்கு இனி தலைவராக வும் வழிகாட்டியாகவும் அலீ இருப்பார்."

இந்த ஹதீஸ், பல வழிகளில் நபியவர்களிடமிருந்து அறிவிக்கப் பட்டிருக்கின்றது. இதை ஸஹாபாக்களில் 110 பேருக்கு அதிகமான வர்களும், தாபிஈன்களில் 84 பேரும் அறிவித்திருக் கின்றார்கள். சுமார் 360க்கும் அதிகமான பிரபல இஸ்லாமிய நூற்களில் இது குறிப்பிடப்பட்டுள்ளது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், ஹஸ்ரத் அலீயின் மீது கொண்டிருந்த அன்பின் வெளிப்பாடே இதுவென்றோ, "மௌலா" என்பதற்கு நட்பு, நேசம் என்ற கருத்தின் அடிப்படையில் இது சாதாரணமான ஒரு ஹதீஸென்றோ இதில் பொதிந்துள்ள கருத்துகளை அலட்சியமாகப் புறந்தள்ளி

விட முடியாது. மாறாக, இது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது ஹஸ்ரத் அலியுடனான தொடர்பின் உண்மை இயல்பைப் பிரதிபலிப்ப தாகவும், இஸ்லாமிய அகீதா வுடன் நெருக்கம் கொண்ட தாகவும் விளங்குகின்றது.

நபித்துவத்தின் ஆரம்பத்தில் "உங்களது நெருங்கிய குடும்பத்தினருக்கு எச்சரிக்கை செய்வீராக" எனும் திருமறை வசனம் இறங்கிய போது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் தமது குடும்பத்தார் அனைவரையும் அழைத்து, இஸ்லாத்தை எடுத்துக் கூறினார்கள். பின்னர், "இவ்விடயத்தில், உங்களில் எவர் எனக்கு உதவி செய்கின்றாரோ அவர், உங்களுக்கு மத்தியில் எனது சகோதரரும் வாரிசும் எனது பிரதிநிதியுமாவார்" என்று அறிவித்த போது, அங்கு கூடியிருந்தவர் களில் ஹஸ்ரத் அலீயைத் தவிர வேறு எவரும் நபியுடைய இந்த அழைப்புக்கு பதில் கொடுக்கவில்லை. ஹஸ்ரத் அலீ நபிகளாரைப் பார்த்துக் கூறினார்கள்:

"அல்லாஹ்வின் நபியே! நான் இவ்விடயத்தில் உங்களுக்கு உதவியாளனாக இருப்பேன்" என்றார்கள். பின், நபியவர்கள் ஹஸ்ரத் அலீயைச் சுட்டிக்காட்டிச் சொன்னார்கள்:

"நிச்சயமாக, இவர் உங்கள் மத்தியில் எனது சகோதரரும் பிரதிநிதியுமாவார்." (காமில் இப்னு அதீர் - பாக 2 - பக் 63 ∴ முஸ்னத் அஹ்மத் பாக 1. பக் 11, இப்னு அபில் ஹதீத் - ஷரகு நஹ்ஜுல் பலாகா பாக,2.பக்.210, மற்றும் வேறு பலரும் அறிவிக்கின்றனர்)

மேலும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் தமது வாழ்வின் இறுதித் தருணத்திலும் கூடியிருந்தவர் களிடம் மீண்டும் இதை உறுதிப்படுத்துவதற்காக விரும்பினார்கள். ஸஹீஹ் புஹாரியில் கூறப்பட்டுள்ளது போல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் கூடியிருந்தவர் களைப் பார்த்து:

"உங்களுக்கு ஒரு விடயத்தை எழுதுவதற்காக, என்னிடம் ஏதாவது ஒன்றை (எழுது கோலும் ஓலையும்)

கொண்டு வாருங்கள். அதன் பிறகு நீங்கள் ஒரு போதும் வழிதவற மாட்டீர்கள்" எனக் கட்டளை பிறப்பித்தார்கள். அங்கிருந்த சிலர் நபியவர்களுடைய கட்டளையைப் புறக்கணித்து, அவர்களுக்கு எழுதுவ தற்கான பொருளைக் கொடுப்பதற்கு மறுப்புத் தெரிவித்து விட்டனர். அது மாத்திரமின்றி, மிகவும் கீழ்த்தரமான வார்த்தை களை உபயோகித்து தடுத்துவிட்டனர் என இந்த ஹதீஸின் தொடரிலே குறிப்பிடப்படுகின்றது, (புஹாரி - பாக 5 - பக் 11 நபியின் நோய் பற்றிய பிரிவு, இதை விடத் தெளிவாக ஸஹீஹ் முஸ்லிம் - பாக 3, பக் 1259ல் குறிப்பிடப்பட்டுள்ளது.

**9. ஒவ்வொரு இமாமும் அடுத்தவரை அறிவித்தல்**

பன்னிரண்டு இமாம்களில் ஒவ்வொரு இமாமும் அவருக்கு முந்திய இமாமால் உறுதிப்படுத்தப் பட்டுள்ளனர். அவர்களில் முதன்மையானவர் இமாம் அலீ இப்னு அபீ தாலிப் ஆவார். அப் பன்னிருவர் பற்றிய விபரம் வருமாறு:

1. இமாம் **அலீ** இப்னு அபீ தாலிப் அலைஹிஸ் ஸலாம்.
2. இமாம் **ஹஸன்** இப்னு அலீ அலைஹிஸ் ஸலாம்.
3. இமாம் **ஹுஸைன்** இப்னு அலீ அலைஹிஸ் ஸலாம்.
4. இமாம் **அலீ இப்னு ஹுஸைன்** (ஜெய்னுல் ஆபிதீன்) அலைஹிஸ் ஸலாம்.
5. இமாம் **முஹம்மத் இப்னு அலீ** அல்பாக்கிர் அலைஹிஸ் ஸலாம்.
6. இமாம் **ஜஉபர் இப்னு முஹம்மத்** அஸ்ஸாதிக் அலைஹிஸ் ஸலாம்.
7. இமாம் **மூஸா இப்னு ஜஉபர்** அலைஹிஸ் ஸலாம்.
8. இமாம் **அலீ இப்னு மூஸா** அர்ரிழா அலைஹிஸ் ஸலாம்.
9. இமாம் **முஹம்மத் ஜவாத் இப்னு அலீ** அத்தகீ அலைஹிஸ் ஸலாம்.
10. இமாம் **அலீ இப்னு முஹம்மத்** அன்னக்கீ அலைஹிஸ் ஸலாம்.

11. இமாம் **ஹஸன் இப்னு அலீ** அல்அஸ்கரீ அலைஹிஸ் ஸலாம்.
12. கடைசியானவரான இமாம் முஹம்மத் இப்னு ஹஸன் **அல்மஹ்தி** அலைஹிஸ் ஸலாம். ஹஸ்ரத் இமாம் மஹ்தீ அலைஹிஸ் ஸலாம் இப்பொழுதும் உயிர் வாழ்கின்றார்கள் என்பது எமது நம்பிக்கையாகும்.

இறுதிக் காலத்தில் இமாம் மஹ்தி அலைஹிஸ் ஸலாம் தோன்றி உலகை நீதியால் நிரப்புவார்கள் என்பதை முஸ்லிம்கள் அனைவரும் நம்புகின்றனர். இமாம் மஹ்தியின் தோற்றம் பற்றிய ஹதீஸ் முதவாத்திர் ஆனதென நிறுவும் தனியான கிரந்தங் களையும் அஹ்லுஸ் ஸுன்னா அறிஞர்கள் யாத்துள்ளனர்.

சில ஆண்டுகளுக்கு முன் "ராபிததுல் ஆலமில் இஸ்லாமி" பத்திரிகையில், இமாம் மஹ்தி பற்றி கேட்கப்பட்ட கேள்வியொன்றுக்கு வழங்கப்பட்ட விளக்கத்தில், அவர்கள் வெளிப்பட்டு வருவார்கள் என்பது உறுதிப்படுத்தப்பட்டதுடன், அதற்கான ஆதாரங்களாக, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் நவின்ற, பிரபல்யமான ஹதீஸ் கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்ட பல ஹதீஸ்களும் முன்வைக்கப் பட்டிருந்தமை குறிப்பிடத்தக்கது. இத்தகவல் 24 ஷவ்வால் 1396ல் மஜ்மஉல் பிக்ஹில் இஸ்லாமி நிறுவனப் பணிப்பாளர் முஹம்மத் அல் முன்தஸிர் அல் கத்தானீயின் அங்கீகாரத்துடன் வெளியானது.

எனினும், அவர்களில் அதிகமானோர், இமாம் மஹ்தி இன்னும் பிறக்கவில்லையென்றே நம்புகின்றனர். எனினும் இமாம் மஹ்தி அலைஹிஸ் ஸலாம் ஏற்கனவே பிறந்துள்ளார் என்பதும் பன்னிரண்டாவது இமாமான அவர்கள் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள் என்பதும் உலகில் நீதியை நிலை நாட்டுமாறு அல்லாஹ்வின் கட்டளை கிடைத்ததும் அவர்கள் வெளியாகு வார்கள் என்பதும் நமது நம்பிக்கையாகும்.

## 10. ஹஸ்ரத் அலீ - அதி சிறந்த ஸஹாபி

ஹஸ்ரத் அலீ அலைஹிஸ் ஸலாம் ஸஹாபாக்கள் அனைவரிலும் மிகச் சிறப்புக்குரியவர்கள் ஆவார். மற்றும் அன்னார் நபிகளாருக்குப் பின்னர் முஸ்லிம் உலகில் முதலிடத்தைப் பெற்றிருந்தார்கள் என்பது நமது நம்பிக்கையாகும். இதுவே அவர்கள் பற்றிய யதார்த்தமாகும்.

இதைவிட மிகைத்துச் சென்று அன்னாரை தெய்வீகத் தன்மை கொண்டவர் எனக் கருதுவதோ அல்லது நபிகளாருடைய தரத்தில் வைத்துப் புகழ்வதோ ஹராமான, ஈமானை இழக்கச் செய்யும் விடயமாகும். அவ்வாறு செய்வோர் வழிகெட்டவர்கள் என்பதில் சந்தேகத்திற்கிடமில்லை. துரதிர்ஷ்டவசமாக, இத்தகையோரும் ஷீயாக்கள் என்றே உலகில் அறியப்படுவதனால் உண்மையான ஷீயாக்களின் சிறப்புகளும் யதார்த்தங்களும் ஏனையோரால் கவனிக்கப்படாமல் போய்விடக் கூடிய நிலையேற்படுகின்றது. எனினும் இமாமிய்யா ஷீயாக்கள் இத்தகைய தீவிரக் கருத்துக் கொண்டோரை இஸ்லாத்தைவிட்டும் தூரமானோர் எனக் கருதுகின்றனர்.

## 11. ஸஹாபாக்கள்

நபித்தோழர்களுக்கு மத்தியில் நல்லவர்கள், சிறப்புக்குரியவர்கள், தியாகிகள் பலர் காணப்பட்டனர். குர்ஆனும், ஹதீஸும் அவர்களை அழகாக சித்தரித்துக் கூறுகின்றன. அதற்காக, நபித் தோழர்கள் அனைவருமே பாவதோசங்களிலிருந்து பரிசுத்தமானவர்களென்றும் அவர்களது செயல் அனைத்துமே சரியானவையாக ஏற்றுக் கொள்ளப் படத்தக்கவையென்றும் கூறிவிட முடியாது. உதாரணமாக அல்குர்ஆனின் சில வசனங்கள் (சூரா பராஅத், நூர், முனாபிகூன் போன்றவை) நயவஞ்சகர்களைப் பற்றிக் கூறுகின்றன. இந்நயவஞ்சகர்களும் நபித்தோழர்களுக்கு மத்தியில் தான் காணப்பட்டனர். அதனால், அவர்களும் நபித்

தோழர்களாகவே கருதப்படக்கூடிய நிலை காணப்பட்டது.

அவர்களில் சிலர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்குப் பிறகு அமைதியாக இருந்த முஸ்லிம்களுக்கு மத்தியில் குழப்பத்தை உண்டுபண்ணத் துணை போன வரலாறும் உண்டு. தமது காலத்து கலீபாவுக்கு செய்த பைஅத்தை மீறி, பல்லாயிரக் கணக்கான அப்பாவி முஸ்லிம்கள் படுகொலை செய்யப்படக் காரணமாகவும் அமைந்தனர் சிலர். எனவே, இத்தகையோரது வாழ்க்கையையும் செயற்பாடு களையும் புனிதமானவை எனக் கருத முடியுமா?

வேறொரு வகையில் சொல்வதானால், இரு தரப்பினர் யுத்தத்தில் ஈடுபடுகின்ற போது, (உதாரணமாக ஜமல், சிப்பீன் போன்றவை) அவ்விரு தரப்பையும் சரியானவர்கள் என்றோ அவ்விருவரது செயலையும் சரியானது என்றோ எவ்வாறு ஒப்புக்கொள்ள முடியும்? இது முரண்பாடான ஓர் அம்சமாகும். எனினும், இதனை நியாயப்படுத்துவதற்காக இஜ்திஹாதை அவர்கள் ஆதாரமாகக் கொள்ள முனைகின்றனர். இரு கூட்டத் திலும் ஒரு கூட்டத்தினர் உண்மையின் பக்கம் இருக்க, மற்றவர்கள் தமது இஜ்திஹாதில் தவறிழைத்தார்கள். எனவே, அவர்களுக்கு அல்லாஹ்விடம் மன்னிப்பும், நன்மையும் இருக்கின்றன என அவர்கள் வாதிடுகின்றனர். நம்மைப் பொறுத்த வரையில் இது ஏற்றுக் கொள்ளத்தக்க ஒரு வாதம் அல்ல. இது மிகவும் சங்கடமான ஒரு நிலையை தோற்றுவிக்கின்றது.

இஜ்திஹாத் என்பதை சாட்டாகக் கொண்டு, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் பிரதிநிதியுடன் செய்த பைஅத்தை முறித்து, யுத்தத்தைத் தொடங்கி, முஸ்லிம்களின் உயிர்களைப் பறிப்பதென்பது எவ்வகையிலும் நியாயமான ஒரு விடயமாகக் கொள்ளப்பட முடியாது. இஜ்திஹாத் தவறாகப் பாவிக்கப் பட்டால் எக்காரியத்தைத் தான் இஜ்தஹாதின் பேரால் நியாயப்படுத்த முடியாது?

நமது நம்பிக்கையின் படி ஒவ்வொரு மனிதனும் - ஸஹாபாக்கள் உட்பட- அவரவர் சம்பாதித்துக் கொண்டவை களுடனேயே இருப்பார்கள். இதன் பிரகாரம், ஒவ்வொருவரும் அவரவரது தக்வாவின் அடிப்படையிலே தர நிர்ணயம் செய்யப் படுகின்றனர். 'உங்களில் சங்கை மிக்கவர் தக்வாவில் உயர்ந்தவர்' எனும் நபி வாக்குக்கேற்ப 'தக்வா' ஒரு மனிதனை அளக்கும் அளவுகோலாகும்.

நபிகளாருடைய காலத்திலும் பின்னரும் இறையச்சம் கொண்டு, அல்லாஹ்வுக்கும் நபியவர்களுக்கும் விசுவாசமாக நடந்தவர்களைப் போற்றி வாழ்த்தும் முஸ்லிம்கள், நபிகளாருடைய காலத்திலும் பின்னரும் வெளிப்புறத்திலிருந்து அவர்களை எதிர்ப்பவர்களாகவும் உள்ளிருந்து அவர்களை வேதனைப்படுத்து வோராகவும் இருந்தவ ர்களை விரும்பாமலிருப்பது நியாயமானதே. எனவே, அவரவரது செயற்பாடுகளே, அவரவரது உண்மை நிலையை அறிந்து கொள்வதற்கு போதிய சான்றுகளாக அமைகின்றன என்பதை எல்லோரும் தெளிவாக விளங்கிக் கொள்கிறோம்.

> "(நபியே!) அல்லாஹ்வையும், இறுதி நாளையும் விசுவாசங்கொண்ட சமூகத்தினர், அல்லாஹ் வையும் அவனது தூதரையும் பகைத்துக் கொண்டார்களே அத்தகையோரை நேசிப்ப வர்களாக நீர் காணமாட்டீர். அவர்கள் தங்களது பெற்றோராயினும் அல்லது தங்களது பிள்ளைக ளாயினும் அல்லது தங்களது சகோதரர்களா யினும் அல்லது தங்களது குடும்பத்தவர்க ளாயினும் சரியே. அவர்களது இதயங்களில் அல்லாஹ் ஈமானை எழுதிவிட்டான்." *(58:22)*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் காலத்திலோ அல்லது பின்னரோ அவர்களை வேதனைக்குள்ளாக் கியவர்கள், முஸ்லிம்க ளால் புகழப்படுவதற்கு எவ்வகையிலும் அருகதையற்ற வர்கள் என்பது நமது தெளிவான நம்பிக்கையாகும்.

எனினும், நபித்தோழர்களில் பெரும்பாலான வர்கள்,

இஸ்லாத்திற்காக மேற்கொண்ட அர்ப்பணிப்பு கள் தியாகங்கள் மூலமாக அல்லாஹ்வினாலேயே புகழப்படும் நிலையையும் பெற்றிருந்தார்கள் என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. இவ்வாறு நபிகளார் மீது பரிபூரணமான விசுவாசங் கொண்டு வாழ்ந்த தூய ஸஹாபாக்களும் அவர்களுக்குப் பின் அந்நேர்வழி யைத் தெரிவு செய்து இறையச்சத்தோடு வாழ்ந்தவர்களும் அவ்வழியில் தற்போது வாழ்ந்து கொண்டிருப்பவர்களும் எப்போதும் புகழுக்கும் மரியாதைக்கும் உரியவர்களே என்பதில் ஐயமில்லை.

> "முஹாஜிரீன்கள், அன்ஸாரிகள், முதலாவதாக முந்திக் கொண்டவர்கள், மற்றும் நற்கருமத்தில் அவர்களைப் பின்தொடர்ந்தவர்கள் ஆகியோரை அல்லாஹ் பொருந்திக் கொண்டான், அவர்களும் அல்லாஹ்வைப் பொருந்திக் கொண்டார்கள்." *(09:100)*

இது தான் ஸஹாபாக்கள் தொடர்பான எமது நம்பிக்கை பற்றிய சுருக்கமான குறிப்பாகும்.

## 11. இமாம்களின் அறிவு நபியிடமிருந்து வந்ததே

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், அல்குர்ஆன் மற்றும் அஹ்லுல்பைத் பற்றிக் குறிபபிட்டுள்ள ஹதீஸின் பிரகாரம், அவ்விரண்டையும் நேர்வழிக்கான வழிகாட்டடி களாக நாம் கொள்கின்றோம்.

அஹ்லுல்பைத் இமாம்கள், பாவங்களை விட்டும் பரிசுத்த மானவர்களாவர் என நாம் நம்புவதால் அவர்களது சொல், செயல், அங்கீகாரம் என்பவற்றையும் குர்ஆன், ஸுன்னா ஆகியவற்றுக்கு அடுத்ததாக மார்க்கச் சட்டங்களுக்கு ஆதாரங்களாகக் கொள்கின்றோம்.

"நாங்கள் உங்களுக்குச் சொல்வதெல்லாம், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களிடமிருந்து எங்கள் தந்தையரை வந்தடைந்து, அவர்களிடமிருந்து

எமக்குக் கிடைத்தவையேயன்றி வேறில்லை" என்று மேற்படி இமாம்கள் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

எனவே, இமாம்கள் குறிப்பிடும் அனைத்துமே நபி (ஸல்) அவர்களின் கருத்து வெளிப்பாடுகளாக அமைகின்றன. மேலும், நம்பகத் தன்மையும் இறையச்சமும் கொண்டு, மக்களிடையே நன்மதிப்பைப் பெற்றவர்கள் அறிவிக்கும் ஹதீஸ்கள் அனைத்தும் எல்லா இஸ்லாமிய அறிஞர்களிடத்திலும் ஏற்றுக் கொள்ளப்படத் தக்கதாகும். இமாம்களின் ஹதீஸ்களை இவ்வகையிலும் நோக்கலாம்.

இமாம் முஹம்மத் இப்னு அலீ அல்பாக்கிர் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், ஜாபிர் (ரழி) அவர்களுக்குச் சொன்னார்கள்:

"ஜாபிரே! நாம் உங்களுக்கு எமது சொந்த அபிப்பிராயங்களைக் கொண்டும் மன இச்சையைக் கொண்டும் எதையும் கூறுவோமாயின், நாங்கள் அழிந்து விடுவோம். ஆனால், நாம் நபி (ஸல்) அவர்களிடமிருந்து சேமித்து வைத்த தகவல்களையே கூறுகின்றோம்."

(ஜாமிஉ அஹாதீஸ் அஷ்ஷீயா, பாக.1,பக்.18)

ஒரு மனிதர் இமாம் ஜ:.பர் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் அவர்களிடம் கேள்வி ஒன்றைக் கேட்க, இமாம் அதற்குப் பொறுத்தமான பதிலளித்தார்கள். அம்மனிதர், குறித்த விடயத்தில் இமாமின் கருத்தை மாற்றியமைப் பதற்காக அவர்களுடன் தர்க்கத்தில் ஈடுபட முனைந்த போது, இமாம், அவரை நோக்கி, "இதை விட்டு விடுங்கள். நான் உங்களுக்குக் கூறிய அனைத்து பதில்களும் நபியிடமிருந்து வந்தவையே. இதில் எவ்வித கலந்துரையாடலுக்கும் விவாதத்துக்கும் இடமில்லை" என்று கூறினார்கள்.

(உசூலுல் காபீ, பாக.1, பக்.58)

நமது ஹதீஸ் கிரந்தங்களில் அல் கா:.பீ, தஹ்தீப், இஸ்திப்ஸார், மன்லா யஹ்ழுருஹு"ல் பகீஹ் போன்றன முக்கிய மானவை. அதன் அர்த்தம், இவற்றிலுள்ள அனைத்து ஹதீஸ்களும் ஸஹீஹானவை, நிராகரிக்க முடியாதவை என்பதல்ல. ஒவ்வொரு ஹதீஸையும்

அறிவித்தவரது வாழ்க்கைக் குறிப்புகள் தெளிவாக சேகரிக்கப்பட்டுள்ள றிஜால் பற்றிய நூல்களும் நம்மிடம் உள்ளன. அறிவிப்பாளர் உரிய நிபந்தனைகளுக்கு உட்படக்கூடிய ஒழுக்க சீலராகவும், இறையச்சமுள்ளவராகவும் இருந்தால், அவர் அறிவித்த ஹதீஸ் ஏற்றுக் கொள்ளப்படுகின்றது. இல்லையெனில் அது நிராகரிக்கப்படுகின்றது. அது எந்த கிரந்தத்தில் பதிவுசெய்யப் பட்டிருப்பினும் சரியே.

சில ஹதீஸ்கள், ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான சகல நிபந்தனைகளையும் கொண்டிருந்தும், சட்ட வல்லுனர்களால் அன்று முதல் இன்று வரை வேறு பல காரணங்களுக்காக அது பயன்படுத்தப்படாது விடப்பட்டி ருந்தால், அது 'மு.்.ரழ் அன்ஹா' என அழைக்கப் படுகின்றது. அதுவும் செல்லுபடியற்றதாகும்.

எனவே, நமது நம்பிக்கைகள் பற்றி அறிந்து கொள்ள விரும்புவோர், மேற்குறிப்பிட்ட ஹதீஸ் கிரந்தங்களில் உள்ள ஹதீஸ்களை, அவை பற்றிய ஆய்வுகளைக் கவனத்திற் கொள்ளாது பயன்படுத்த முனைவார்களாயின் அவர்களால் பூரணமான அல்லது உண்மையான விளக்கத்தைப் பெறுவது சாத்திய மற்றதாகி விடும். எந்தவொரு ஹதீஸைப் பொறுத்தவரையிலும் அதன் அறிவிப்பாளர் மற்றும் ஏனைய காரணிகளைப் பொறுத்தே அது சரியானதா? பிழையானதா என்பது தீர்மானிக்கப் படுகின்றது.

வேறொரு விதத்தில் சொல்வதானால், இன்று பிரபல்யம் அடைந்திருக்கும் மத்ஹபுகளிடம் ஸிஹாஹ் (சரியானவை) எனும் பெயரில் ஹதீஸ் கிரந்தங்கள் இருக்கின்றன. அவற்றிலுள்ள ஹதீஸ்கள் அனைத்தும் சரியானவையென அவற்றின் ஆசிரியர்கள் உறுதிப்படுத்தியுள்ளனர். வேறு சிலரும் அவை சரியானவையெனக் கருதியுள்ளனர்.

ஆனால், நமது ஹதீஸ் கிரந்தங்களைத் தொகுத்தவர்கள் நம்பத்தகுந்த நல்லடியார்களாக இருந்த போதிலும், அவர்கள் தொகுத்த ஹதீஸ்களின் உண்மை நிலையை அறிவதற்காக, அவற்றை அறிவித்தவர்களின்

வரலாற்றை ஆராய்ந்த பின்னரே அவ சரியானவையா, அல்லது பிழையானவையா என்ற முடிவுக்கு வர முடிகின்றது.

நம்முடைய நம்பிக்கைகள் பற்றி ஆய்வு செய்ய முனையும் பலர் இது பற்றி அலட்சியம் செய்வதால் பிழையான தகவல்களை முடிவுகளாகப் பெற வழிபிக்கிறது என்பது கவனிக்கத் தக்கது.

எனவே, அல்குர்ஆனுக்கும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் ஹதீஸ்களுக்கும் அடுத்தபடியாக பன்னிரண்டு இமாம்களின் ஹதீஸ்களும் -நல்லவர்கள், நம்பத்தகுந்தவர்களினால் அறிவிக்கப் பட்டிருப்பின்- மூலாதாரமாகக் கொள்ளப் படுகின்றன.

அத்தியாயம் 6

# முக்கிய விடயங்கள்

முந்திய அத்தியாயங்களில் மார்க்கத்தின் அடிப்படையான ஈமானின் அம்சங்கள் பற்றிய சுருக்கமான விளக்கம் முன்வைக்கப் பட்டது. இவ் அத்தியாயத்தில், மார்க்கத்தின் வேறு சில முக்கிய விடயங்கள் பற்றிய நமது நம்பிக்கைகளை ஆராய்வோம்.

## 1. அறிவின் பிரித்தறியும் தன்மை

மனிதனுடைய அறிவு, பெரும்பாலான விசயங் களில் நல்லவற்றையும் தீயவற்றையும் பகுத்தறிந்து கொள்ளும் இயல்பு டையதாகும். வாழ்வில் நல்லவற்றை கைக்கொண்டு, தீயவற்றைக் கைவிடுவதற்காக மனிதர்க ளுக்கு அல்லாஹ் வழங்கிய பெரும் அருட்கொடையே இதுவாகும். இறைவேதங்கள் இறங்குவதற்கு முற்பட்ட காலங்களில், அறிவின் மூலமாக பல விடயங்களில் நன்மை-தீமைகளை உணர்ந்து செயற்படுவோராக மனிதர்கள் இருந்தனர்.

இதன்படி உண்மை, நேர்மை, வீரம், நீதி, பெருந் தன்மை, விட்டுக்கொடுப்பு, தர்மம் போன்ற பல அம்சங்களை நல்லவை யாகவும் பொய், துரோகம், கஞ்சத்தனம், பிடிவாதம், கோழைத் தனம் போன்ற பல அம்சங்களை தீயவையாகவும் அறிவு பகுத்தாய்ந்து புரிந்து கொள்கின்றது.

மனிதனின் அறிவு, வரையறைக்குட்பட்டது என்ப தால் அதனால் அனைத்தையும் பிரித்தறிந்து கொள்வ தென்பது சாத்திய மற்றது. எனவே, அறிவு மூலம் மட்டும் விளங்கிக் கொள்ளப்பட முடியாத விளக்கங்களையும் ஞானங்களையும் அறிவிப்பதற் காகவே வேதங்களையும் இறைத்தூதர்களையும் இறைவன் அனுப்பினான்.

எனவே, அறிவானது உண்மையை உரியபடி உணர்வதில் சுதந்திரமாகச் செயற்படுகின்:றது என்பது முற்றாக நிராகரிக்கப்படு மானால், ஏகத்துவம், நபிமாரின் வருகை, இறைவேதங்கள் பற்றிய நம்பிக்கைகள் பாழாகி விடலாம். ஏனெனில், அல்லாஹ்வின் உள்ளமையை நிரூபிப்பதும் நபிமாரின் பணியை உண்மைப்படுத்து வதும் அறிவின் மூலமேயாகும். ஏகத்துவம், நபித்துவம் பற்றி நிரூபிக்கின்ற போது, முதலில் அறிவு ரீதியான ஆதாரங்களைக் கொண்டே அவற்றை நிரூபிக்க வேண்டும். ம்மாறாக, மார்க்க ஆதாரங்களைக் கொண்டு மாத்திரம் இவற்றை நம்பச் செய்ய முடியாது.

## 2. இறைநீதி

அல்லாஹ் நீதியானவன் என்பது நமது உறுதியான நம்பிக்கையாகும். அவ்வாறே அல்லாஹ் தன் அடியார்களுக்கு அநீதியிழைப்பதும் ஆதாரமில்லாது ஒருவரைத் தண்டிப்பதும் அல்லது மன்னிப்பதும் தன் வாக்குறுதிகளை நிறைவேற்றாது விடுவதும் தகுதியில் லாத மற்றும் பிழை செய்வோரை நபிமார்களா கத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு வேதங்கள், தூதுத்துவம், அற்புதங்களைக் கொடுப்பதும் எவ்விதத்திலும் சாத்திய மற்றன வாகும். சீதேவிகளாக வாழவேண்டும் என்பதற்காகப் படைக்கப்பட்ட மனிதர்களுக்கு, நபிமார்களை அனுப்பி நேர்வழியை அறிவிக்காது விட்டுவிடுவதும் அல்லாஹ்வினது நீதியைப் பொறுத்தவரை சாத்திய மற்றதாகும்.

அல்லாஹ் நீதியாளனாகவும், தன் அடியார் களுக்கு சிறிதளவும் அநீதி இழைக்காதவனாகவும் இருக்கின்றான். அநீதி என்பது, அல்லாஹ்வின் தெய்வீக

இயல்புக்கு முற்றிலும் ஒவ்வாத ஓர் அம்சமாகும்.

> "இன்னும் உமதிறைவன் எவருக்கும் அநியாயம் செய்யமாட்டான்." *(18:49)*

எனவே, இவ்வுலகிலோ மறுமையிலோ மனிதர்களுக்கு அல்லாஹ்வினால் தண்டனை வழங்கப் படுகின்றதெனில், அதற்கு முழுக் காரணமாகவும் அம்மனிதனே இருக்கின்றான். அவனது செயல்களே அவனது நிலையை நிர்ணயம் செய்கின்றன.

> "ஆகவே, அல்லாஹ் அவர்களுக்கு அநியாயம் செய்ய வில்லை. மாறாக, அவர்கள் தமக்குத் தாமே அநியாயம் செய்து கொண்டனர்." *(09:70)*

மனிதர்களுக்கு மாத்திரமல்ல, தான் படைத்த எந்தவோர் உயிரினத்துக்கும் அல்லாஹ் அநீதியிழைக்கமாட்டான்.

> "மேலும், இறைவன் உலகத்தாருக்கு அநீதியை நாடமாட்டான்." *(03:108)*

அல்லாஹ், மனிதர்களால் செய்ய முடியாத எந்த விடயத்தையும் அவர்களில் திணிப்பதில்லை. அவ்வாறு திணித்து, அவற்றை அவர்கள் செய்யாது விட்டமைக்காக அவன் தண்டனை வழங்குவானானால், அவன் நீதியாளன் என்பதற்கு அர்த்தமில்லாது போய்விடும்.

> "இறைவன், மனிதர்களுக்கு அவர்களது சக்திக்கு அப்பாற் பட்டதை ஏவமாட்டான்." *(02: 280)*

### 3. மனிதன் சுதந்திரமானவன்

அல்லாஹ் மனிதனை தெரிவுச் சுதந்திரம் உள்ளவனாகவே படைத்துள்ளான். மனிதர்களது செயல்கள் அனைத்தும் அவர்களது விருப்பத்தின் படியே இடம்பெறுகின்றன என்று நாம் நம்புகின் றோம். இதற்கு மாறாக மனிதனின் செயல்பாடுகளை அவரவரது விதி அல்லது இறை நியதி நிர்ணயிக்கிறது எனக்

கொள்ளுமிடத்து மனிதர்களது குற்றத்திற்காக அவர்களை அல்லாஹ் தண்டிப்பதும், நல்லவர்களுக்கு நற்கூலி வழங்குவதும் அர்த்தமற்றதாகிவிடும். எனவே, இத்தகைய சீரற்ற போக்குகள் அல்லாஹ்வில் அறவே இருக்க முடியாதவையாகும்.

சுருங்கக் கூறின், அநேகமான விடயங்களைப் பிரித்தறி வதிலே, மனிதனது அறிவு, சிந்தனை என்பன சுதந்திரமாக செயற்படுகின்றன என்பதை ஏற்றுக் கொள்வது மார்க்கத்தின் தவிர்க்க முடியாத அம்சமாக அமைகின்றது. ஆனால், மனிதனது குறுகிய, வரையறைக்குட்பட்ட அறிவின் மூலமாக எல்லா உண்மை களையும் புரிந்து கொள்ள முடியாதிருப்பதன் காரணமாகவே, அல்லாஹ் தன் நபிமார்களையும் வேதங்களையும் இவ்வுலகுக்கு அனுப்பினான்.

## 4. அறிவு (அக்ல்) ஒரு மூலாதாரமே

மேற்கூறிய விளக்கங்களின் அடிப்படையில், அறிவு (அக்ல்) என்பது, மார்க்கத்தின் அடிப்படை மூலாதாரங்களில் ஒன்றாகும் என நாம் கருதுகின்றோம். அறிவு, ஒரு விடயத்தை உறுதியாக விளங்கி, அறிந்து, அதைப் பற்றி தீர்ப்பு வழங்கும் தன்மை கொண்டது.

உதாரணமாக, அநியாயம், பொய், கொலை, களவு முதலான செயல்கள் தீயவையென குர்ஆனிலும், ஹதீஸிலும் விளக்கம் தரப்படவில்லையென வைத்துக் கொள்வோம். அத்தகைய சந்தர்ப்பத்தில் அறிவு அவை தீயவையென இனங் காண்பித்திருக்கும். எனவே தான், அறிவு (அக்ல்) என்பது முக்கியத்துவம் மிக்க ஓரிடத்தைப் பெறுகின்றது. இம்முக்கியத் துவத்தை விபரிக்கும் அல்குர்ஆன் வசனங்கள் பல உள்ளன.

ஏகத்துவப் பாதையை ஆய்வு செய்வதற்காக, வானம் பூமியிலிருக்கும் இறை அத்தாட்சிகளைப் படித்து ப்பார்க்க வருமாறு, அல்குர்ஆன் அறிவுடையோருக்கு அழைப்பு விடுக்கின்றது.

> "நிச்சயமாக வானங்கள், பூமியைப் படைத்திருப்பதிலும், இரவும் பகலும் மாறி மாறி வருவதிலும் அறிவுடை யோருக்கு பல அத்தாட்சிகள் இருக்கின்றன." *(03:190)*

பிறிதோர் இடத்தில், இறைவசனங்களை விபரிப்பதன் நோக்கம், மனிதர்களது அறிவு, சிந்தனை, விளங்கும் தன்மையை அதிகரிப்பதற்காகவே என்று கூறுகின்றது.

> "அவர்கள் விளங்கிக் கொள்வதற்காக நாம் நம்முடைய வசனங்களை எவ்வாறு பலவகைகளில் திருப்பித் திருப்பிக் கூறுகின்றோம் என்று நீர் கவனிப்பீராக." *(06:65)*

தீயவற்றிலிருந்து நல்லவற்றைப் பிரித்தெடுப் பதற்கு சிந்தனையைப் பயன்படுத்துமாறு அனைத்து மனிதர்களுக்கும் அல்குர்ஆன் அழைப்பு விடுக்கின்றது

> "குருடனும், பார்வையுடையோனும் சமமாவார்களா? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா? என வினவுங்கள்." *(06:50)*

உண்மையை விளங்கிக் கொள்வதற்கு அல்லாஹ்வின் அருட்கொடைகளான அறிவு, கண், காது முதலானவற்றைப் பயன்படுத்தாதவர்களை அல்குர்ஆன், மிக இழிவானவர்களாகக் கருதுகின்றது.

> "நிச்சயமாக, அல்லாஹ்விடம், மிருகங்களிலும் மிகக் கெட்டவை, சிந்தித்து விளங்கிக் கொள்ளாது செவிடர்களாக வும் ஊமைகளாகவும் இருப்போர் தான்." *(08:22)*

இவை தவிர, இன்னும் பல வசனங்களும் அறிவின் முக்கியத்துவம் பற்றிப் பேசுகின்றன.அறிவுக்கு இஸ்லாத்தில் இத்தகைய முக்கியத்துவம் வழங்கப் பட்டிருக்கும் போது, இஸ்லாத்தின் அடிப்படையிலும் அதனையொட்டிய பிரிவுகளிலும் அறிவின் பங்கைக் குறைத்து மதிப்பிடுவது எவ்வகையில் நியாயமாகும்?

## 5. பாரிய அனர்த்தங்கள் ஏன்?

உலகில் நிகழ்கின்ற பூகம்பம், புயல் மற்றும் பாரிய இயற்கை அனர்த்தங்கள் அழிவுகளின் பின்னணி பற்றிய நமது நம்பிக்கையின் படி, அவை சிலவேளை இறைவனின் தண்டனையாக வரும்.

> "நம்முடைய கட்டளை வந்ததும், அவர்களது ஊரின் மேற்பகுதியை அதன் கீழ்ப்பகுதியாக தலைகீழாக ஆக்கிவிட்டோம். இன்னும், அதன் மீது சுடப்பட்ட கற்களை மழையாகப் பொழியச் செய்தோம்." *(11:82)*

வரம்பு மீறிய 'ஸபஉ' நகரவாசிகளைப் பற்றிக் குறிப்பிடும் அல்குர்ஆன் இவ்வாறு கூறுகின்றது :

> "அவர்கள் நம்மை மறுத்து விட்டனர். ஆதலால், நாம் பெரும் அழிவை ஏற்படுத்தக் கூடிய வெள்ள த்தை அவர்களுக்கு அனுப்பினோம்." *(34:16)*

வேறு சில அனர்த்தங்களுக்குப் பின்னணியாக அமைவது அவற்றின் மூலம் மக்களிடையே உண்மையின் பால் விழிப்புணர்வை ஏற்படுத்துவதாகும். இவ்வகைச் சோதனைகள் ஒரு புறத்தில் அல்லாஹ்வின் அருளாகவும் கொள்ளப்படுகின்றது.

> "மனிதர்களின் கைகள் சம்பாதித்த தீயவற்றின் காரணமாக கரையிலும் கடலிலும் குழப்பம் வெளிப்பட்டு விட்டது. அவர்கள் செய்தவற்றில் சிலதை, அவர்கள் சுவைக்கும் படி செய்வதற்காக, அவன் இவ்வாறு சோதிக்கிறான். அதன் மூலம் அவர்கள் அவன்பால் திரும்பி விடலாம்." *(30:41)*

மற்றொரு வகையான அனர்த்தங்கள் மனிதர்கள் தாமாகவே வலிந்து ஏற்படுத்திக் கொண்டவையாகும்.

> "நிச்சயமாக, அல்லாஹ் எந்தவொரு கூட்டத்தினரையும், அவர்கள் தங்களைத் தாங்களே மாற்றிக் கொள்ளாதவரை மாற்றமாட்டான்." *(13:11)*
>
> "உனக்கு யாதொரு நன்மை ஏற்பட்டால், அது அல்லாஹ் வினால் ஏற்பட்டது. இன்னும் உனக்கு

*யாதொரு தீங்கு ஏற்பட்டால், அது உன்னால் தான் உனக்கு ஏற்பட்டது.” (04:79)*

### 6. மார்க்க சட்டத்தின் நான்கு மூலாதாரங்கள்

பிக்ஹ் எனப்படும் மார்க்கத்தின் சட்டங்கள் நான்கு மூலாதாரங்களிலிருந்து தொகுக்கப்படுகின்றன. அவை யாவன:

1. அல்குர்ஆன்: இது இஸ்லாமிய அறிவு, சட்டதிட்டங்கள் அனைத்தினதும் ஊற்றுக் கண்ணாகும்.
2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களினதும், அவர்களது அஹ்லுல்பைத் வழியில் தோன்றிய பரிசுத்த இமாம்களினதும் வழிமுறைகள்.
3. இஜ்மாஉ: அறிஞர்களின் ஏகோபித்த கருத்தொற்றுமை. (நபியவர்கள் அல்லது இமாம்களின் அபிப்பிராயம் மற்றும் தீர்ப்புகளிலிருந்து வெளிப்படுவதாக அமைய வேண்டும்.)
4. அக்ல் (அறிவு): அறிவின் அடிப்படையிலான சந்தேகத்துக்கு இடமற்ற தீர்க்கமான (கத்‘ஈ) முடிவுகளைக் குறிக்கிறது.

கியாஸ், இஸ்திஹ்ஸான் போன்ற, தீர்க்கமான முடிவுகளைத் தராத சந்தேகத்திற்கிடமான (ழன்னீ) ஆதாரங்களை மார்க்க சட்ட விடயத்தில் நாம் மூலாதாரமாக அங்கீககரிப்பதில்லை. அவற்றின் மூலம் அண்ணளவான கருதுகோள்கள் மாத்திரமே பெறப்பட முடியும் என்பது இதற்குக் காரணமாகும். ஆயினும் தீர்க்கமான முடிவுகளைத் (உதா: நீதி நல்லது, அநீதி கூடாது போன்ற) தரும் போது அறிவின் இத்தகைய முடிவு ஆதாரமாகக் கொள்ளப்படுகின்றது.

பெருமானார் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களதும் இமாம்களதும் வழிகாட்டல்கள், மனித வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து அம்சங்களையும் தெளிவுபடுத்தி நிற்கின்றன. இதனால், அண்ணளவான, தீர்க்கமற்ற ஆதாரங்களின் பால் செல்வது அவசியமற்றதாகிறது. மாறும் உலகில் தோன்றுகின்ற பிரச்சினைகளுக்கான தீர்வுகளை குர்ஆன் ஹதீஸில் இருந்து பெற்றுக் கொள்ள முடியும் என்றே நாம் நம்புகின்றோம்.

## 7. இஜ்திஹாதின் கதவு திறந்தே இருக்கின்றது

மார்க்கத்தின் சகல விஷயங்களிலும் இஜ்திஹாதின் கதவு திறந்திருக்கின்றது என்பது நமது நம்பிக்கையாகும். அதாவது, மார்க்கச் சட்ட நிபுணர்கள், மார்க்கத்தின் அடிப்படை மூலாதாரங்களிலிருந்து சட்டங்க ளைத் தொகுத்தெடுத்து அவ்வாறு தாமாகத் தொகுத்தறிந்து கொள்ளும் சக்தியைப் பெறாதவர்க ளுக்கு வழங்க முடியும். அவர்களது கருத்துகள், முந்திய முஜ்தஹிதுகளின் கருத்தை ஒத்ததாக இல்லாவிடினும் சரியே. மார்க்கத் தீர்ப்புகளை தாமாகத் தொகுத்துத் தெரிந்து கொள்வதற்கான பூரண அறிவற்றவர்கள், நன்கு பாண்டித்தியம் பெற்ற, சமகாலத்தில் வாழுகின்ற மார்க்க நிபுணரைப் பின்பற்றுவது அவசியமாகும்.

இவ்வாறாக ஒரு முஜ்தஹிதின் வழிகாட்டலை ஏற்று நடப்பதை *தக்லீத்* என்றும் அத்தகைய முஜ்தஹிதுகளை 'மர்ஜஉத் தக்லீத்' என்றும் அழைக்கின்றோம்.

முன்னர் எப்போதோ வாழ்ந்த ஒரு முஜ்தஹிதைப் பின்பற்றுவதை நாம் அனுமதிப்பதில்லை. சமகாலத்தைச் சேர்ந்த ஓர் முஜ்தஹிதைப் பின்பற்று வதன் மூலம் மார்க்க சட்ட விளக்கங்களில் உயிரோட் டமும் பசுமையும் பாதுகாக்கப்படுவதாக நம்புகின்றோம்.

## 8. இஸ்லாம் பரிபூரண மார்க்கம்

இஸ்லாமிய சட்டத்தில் விடுபட்டுப் போன எதுவும் இருப்பதாக நாம் நம்புவதில்லை. இஸ்லாம் விபரிக்காத வாழ்வின் அம்சங்கள் எதுவுமில்லை. மறுமை நாள் வரை மனிதர்களுக்குத் தேவையான அனைத்து சட்டங்களும் குறிப்பாகவோ, பொதுவாகவோ இஸ்லாமிய மூலாதாரங்க ளூடாக விபரிக்கப்பட்டுள்ளன. எனவே, மார்க்க சட்ட நிபுணர்கள், அம்மூலாதாரங் களிலிருந்து சட்டங்களைத் தொகுக்க முடியுமே யல்லாமல், புதிதாக சட்டங்களை உருவாக்க முடியாது. அல்குர்ஆனில் இறுதியாக அருளப்பட்ட வசனம் இவ்வாறு குறிப்பிடுகின்றது:

"இன்றுடன் உங்களுக்காக உங்கள் மார்க்கத்தை பரிபூரணமாக்கினேன். எனது அருட்கொடையை உங்கள் மீது முழுமையாக்கினேன். இன்னும் உங்களுக்காக இஸ்லாத்தை மார்க்கமாகப் பொருந்திக் கொண்டேன்." *(05:03)*

எல்லாக் காலங்களுக்கும் சமுதாயங்களுக்கும் தேவையான சட்ட திட்டங்களையும் வழிகாட்டல்களையும் தன்னகத்தே கொண்டிராவிட்டால், 'பரிபூரணமாக்கி விட்டேன்' என இறைவனால் விதந்துரைக்க முடியுமா?

அண்ணல் நபி ஸல்லல்வாஹு அலைஹி வஆலிஹி தமது இறுதி ஹஜ்ஜின் போது, மக்களைப் பார்த்து இவ்வாறு குறிப்பிட்டார்கள்:

"மனிதர்களே! அல்லாஹ் மீது ஆணையாக, எவை உங்களை சுவர்க்கத்திற்கு சமீபமாக்கி, நரகை விட்டும் தூரமாக் குமோ அவை அனைத்தையும் நான் ஏவியுள்ளேன். மேலும், எவை உங்களை நரகிற்கு சமீபமாக்கி சுவனத்தை விட்டும் தூரமாக் குமோ அவை எல்லாவற்றையும் நான் தடுத்துள்ளேன்."

(உசூலுல் கா:ஃபீ, பாக.2, பக்.74)

மேலும் இமாம் ஜஃபர் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் குறிப்பிட்டார்கள்:

"இஸ்லாமிய சட்டங்களில், விரலின் நுனியினால் உடம்பில் உராய்ந்நால் அதற்குரிய தண்டம் பற்றிக் கூட, நபியவர் கள் கூற ஹஸ்ரத் அலீ அலைஹிஸ்ஸலாம் எழுதிக் கொண்டார்."

(ஜாமிஉல் அஹாதீஸ், பாக.1, பக்.18)

இந்நிலையில் தீர்க்கமான முடிவுகளுக்கு இட்டுச் செல்லாத கியாஸ், இஸ்திஹ்ஸான் போன்ற முறைக ளினால் பெறும் முடிவுகளை மார்க்க சட்டங் களைத் தொகுத்தெடுப்பதற்கான மூலாதாரங்களாகக் கொள்வது பொருத்தமற்றதாகவே நாம் கருதுகிறோம்.

## 9. தகிய்யா என்பது நயவஞ்சகமா?

பிடிவாதம் பிடித்த முரடர்களிடம் அகப்பட்டுக் கொண்ட ஒருவர் தனது கொள்கையைப் பற்றி வெளிப் படையாகத் தெரியுமிடத்து ஆபத்தான நிலைக்குத்

தள்ளப்படும் என்று அஞ்சுகின்ற நிலையில், கொள்கையை வெளியிடுவதால் எப் பிரயோசனமும் ஆகப் போவதில்லை எனக் கண்டால் தன் கொள்கையை மறைத்துக் கொள்வதில் தப்பில்லை. இதுவே 'தகிய்யா' எனப்படுகின்றது. இவ்விடயம், அறிவு ரீதியானது மட்டுமன்றி அல்குர்ஆனின் வசனங்களும் கூட பறைசாற்றும் ஒரு விசயமாகும்.

அல்குர்ஆன், பிர்அவ்னுடைய குடும்பத்திலிருந்த ஒரு மு..மினுடைய விடயத்தை இவ்வாறு விபரிக்கின்றது:

> "பிர்அவ்னுடைய குடும்பத்தினரில், தனது *ஈமானை மறைத்து வைத்திருந்த* மு..மினான மனிதர் சொன்னார், 'ஒரு மனிதரை, அவர் அல்லாஹ்தான் எனது இரட்சகன் என்று கூறியதற்காக நீங்கள் கொலை செய்து விடுவீர்களா? அவரோ உங்கள் இரட்சகனிட மிருந்து தெளிவான அத்தாட்சிகளை திட்டமாகக் கொண்டு வந்திருக்கின்றார்." *(40:28)*

இங்கு *'அவரது ஈமானை மறைத்தார்'* எனக் கூறப்படுவதே தகிய்யாவுடைய நிலை ஆகும். எனவே, பிர்அவ்னுடைய குடும்பத்திலிருந்த அந்த விசுவாசி யானவர், தனது ஈமானை மறைக்காது வெளிப்படுத்தி, ஆபத்தை விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டிய அவசியம் கிடையாது. அது பயனுள்ளதாகவும் இருந்திருக்காது.

மேலும், அல்குர்ஆன் இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் முஷ்ரிக்குகளிடம் அகப்பட்ட சில முஸ்லிம் வீரர்கள் மற்றும் முஜாஹிதீன்களை தகிய்யாவை பேணுமாறு கட்டளை பிறப்பித்தது.

> "மு..மின்கள், தங்களைப் போன்ற மு..மின்களை யன்றி காபிர்களை தங்களது பாதுகாவலர்களாக ஆக்கிக் கொள்ள வேண்டாம். எவரேனும் *அவர்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அன்றி* அவ்வாறு செய்தால், அவர்களுக்கு அல்லாஹ்விடத்தில் எவ்விதத்திலும் சம்பந்தமில்லை." *(03:28)*

இதன் படி 'தகிய்யா' எனும் ஈமானை மறைத்தலானது, பிடிவாதக் குணம் படைத்த அடக்கு முறையாளர்கள் மற்றும் வெறிபிடித்த கூட்டத்தாரிடமிருந்து தனது உயிர், உடைமை மற்றும் மரியாதை என்பவற்றுக்கு ஆபத்து வருவது நிச்சயம் எனவும் ஈமானை வெளிக் காட்டுவதால் குறிப்பிடத்தக்க எந்தப் பிரதிபலனும் கிடைக்காது என்றும் உணரப்படும் போது மாத்திரமே ஆகுமான தென்பது குறிப்பிடப்படுகின்றது. இது போன்ற இடங்களில், ஒருவர் வீணாகத் தன் உயிரைக் கொடுத்து, தன் மூலமாக சமூகம் பெறவுள்ள பயன்களை இல்லாது செய்து விடக்கூடாது.

இமாம் ஜ:்பர் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் குறிப்பிடுகின்றார்கள். "தகிய்யா என்பது மு:்மினுடைய பாதுகாப்புக் கேடயமாகும்." (வசாயில், பாக.11, பக்.461)

கேடயம் என்ற வாசகம் மிகவும் அழகானதாகும். எதிரிகளிடமிருந்து பாதுகாப்புப் பெறுவதற்கான கேடயமாக இங்கு 'தகிய்யா' வர்ணிக்கப்படுகின்றது.

ஹஸ்ரத் அம்மார் (ரழி) அவர்கள் தகிய்யா செய்து, பின் அதுபற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களிடம் கூறிய போது, நபியவர்கள் அதனை ஆமோதித்த சம்பவம், வரலாற்றில் மிகவும் பிரபல்யமான நிகழ்வாகும். இதை அதிகமான குர்ஆன் விரிவுரையாளர்களும் வரலாற்றாசிரியர்களும் ஹதீஸ் கலை வல்லுனர்களும் தத்தமது நூற்களில் குறிப்பிட்டுள்ளனர். வாஹிதீ தனது அஸ்பாபுன் நுஸூலிலும், தபரி, குர்துபி, ஸமஹ்ஷரி, பஹ்ருர்ராசி, நைஸாபூரி, பைழாவி போன்றோர் தமது பிரசித்தி பெற்ற அல்குர்ஆன் விரிவுரைகளில் சூரா நஹ்ல் 106ம் வசனத்தின் விளக்கவுரையின் கீழ் இதனைக் குறிப்பிடுகின்றனர்.

போர் வீரர்கள், போர்க்களத்தில் தம்மையும் தமது ஆயுதங்களையும் மறைத்துக் கொள்வதும் போரின் இரகசியங்களை எதிரிகள் அறிந்து விடாது மறைப்பதும் மனிதர்களது வாழ்வில் அவ்வப்போது நடைபெறும்

சம்பவங்களாகும். இவை அனைத்தும் தகிய்யா வகையைச் சேர்ந்ததாகும். மொத்தத்தில் தகிய்யா அல்லது மறைத்தல் என்பது, வெளிப்படுத்துவதன் மூலம் பயன்பாடின்றி ஆபத்தே வரும் எனக் காணும் இடத்தில் மறைக்க வேண்டிய விஷயங்களை வெளிப்படுத்ததாது இரகசியம் பேணுவதைக் குறிக்கிறது. இது அறிவு ரீதியாகவும் மார்க்க ரீதியாக வும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு நியதியாகும். ஷீயாக்கள் மாத்திர மன்றி, உலக முஸ்லிம்கள் அனைவருமே, அறிவு ஞானம் படைத்த மனிதர்கள் எல்லோரும் இதனை நடைமுறைப் படுத்து கின்றார்கள்.

விடயம் இவ்வாறிருக்க தகிய்யா என்பது ஷீயாக்களிடம் மட்டுமே காணப்படுகின்ற சர்ச்சைக்குரிய ஓர் அம்சம் எனக் காட்டி விமர்சிக்க முற்பட்டிருப்பது வியப்புக்குரியதாகும். ஆனால், இது அல்குர்ஆனிலும் ஹதீஸிலும் நபித் தோழர்களின் நடைமுறைகளிலும் மட்டுமன்றி உலகின் எல்லா அறிஞர்களிடத்திலும் காணப்படும் வழிமுறையாகும்.

## *10. தகிய்யா எங்கு ஹராமாகும்?*

தகிய்யா செய்வது சில இடங்களில் ஆகுமாக இருக்கின்ற அதேவேளை, வேறு சில இடங்களில் அது ஹராமாகவும் அமைகின்றது. இஸ்லாத்திற்கோ அல்குர்ஆனுக்கோ அல்லது இஸ்லாத்தின் அடிப்படைகளுக்கோ, அதன் அமைப்புக்கோ களங்கம் அல்லது ஆபத்து ஏற்படும் நிலைமகள் தோன்றும் பட்சத்தில் தன் கொள்கையை வெளிப்படுத்துவதன் மூலம் தனக்கு ஏற்படக் கூடிய ஆபத்துகளைப் பற்றி கவனத்திற் கொள்ளக் கூடாது என்பது நமது நம்பிக்கையாகும். ஆசூரா தினத்தில் இமாம் ஹுஸைன் அலைஹிஸ் ஸலாம் செய்த அர்ப்பணிப்பும் இந்த வகையைச் சேர்ந்ததாகும். உமையா ஆட்சியாளர்கள் இஸ்லாமிய உம்மத்தின் அடிப்படைகளையே தகர்க்கலானார்கள். இமாம் ஹுஸைனின் எழுச்சியின் மூலம் உண்மை நிலை அம்பலமாகியது. இடம் பெறவிருந்த பேரழிவிலிருந்து முஸ்லிம் உம்மத் காப்பாற்றப் பட்டது.

இது பற்றிய தப்பான அபிப்பிராயங்களுக்குக் காரணம் என்னவெனில், ஷீயாக்களின் கோட்பாடுகள் பற்றிய போதுமான தெளிவு இன்மை அல்லது அவர்களின் எதிரிகள் சொல்கின்ற வற்றை ஆதாரமாகக் கொள்வது ஆகும். இது வரை தரப்பட்ட விளக்கம் உண்மை நிலையைப் புரிந்து கொள்ளப் போதுமான தாகும் என்று நம்புகின்றோம்.

## 11. இஸ்லாமிய வணக்க வழிபாடுகள்

அல்குர்ஆனும் ஸுன்னாவும் குறிப்பிடுகின்ற இபாதத்து களை கட்டாயமாக மேற்கொள்ள வேண்டும் என நாம் பூரணமாக நம்புகின்றேம். இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையிலாக முக்கிமான தொடர்பு ஊடகமாகக் கருதப்படுகின்ற நாளாந்த ஐவேளைத் தொழுகை, ஈமானை வலுப்படுத்திக் கொள்ளவும் உளத் தூய்மையையும் இறையச்சத்தையும் வளர்த்துக் கொள்ள வும் மன இச்சைகளை வெல்லவும் சிறந்த சாதனமாகிய நோன்பு என்பன கட்டாயக் கடமைகளைச் சார்ந்ததாகும். ஹஜ், முஸ்லிம் களின் இறையச்சத்தை மெருகூட்டி, அவர்களிடையேயான சர்வதேச உறவைக் கட்டியெழுப்பக் கூடியதாகவும் முஸ்லிம்களின் கண்ணியத்துக்கு எடுத்துக் காட்டாகவும் விளங்குகின்றது. ஸக்காத், குமுஸ், நன்மையை ஏவுதலும் தீமையைத் தடுப்பதும், இஸ்லாத் திற்கும் முஸ்லிம்களுக்கும் எதிராக போர் புரிவோருக்கு எதிராகப் போராடுவதும் அடிப்படைக் கடமைகளில் உள்ளவையாகும்.

பிரஸ்தாப கிரியைகளின் நடைமுறை சம்பந்தப்பட்டட துணை விடயங்களில் நம்மிடம் ஏனைய மத்ஹபுளோடு கருத்து வேறுபாடு காணப்படலாம். இது இத்தகைய அம்சங்களில் அஹ்லுஸ் ஸுன்னாக்களின் நான்கு மத்ஹபுகள் மத்தியில் காணப்படும் கருத்து வேறுபாடுகளை ஒத்ததாகும்.

## 12. தொழுகைகளை சேர்த்துத் தொழுதல்

ஐவேளைத் தொழுகையையும் தனித்தனியாக அதற்குரிய நேரத்தில் நிறைவேற்றுவதே ஏற்றமானதும் சிறப்பானதும் ஆகும். எனினும் ளுஹரையும் அஸரை

யும் அதே போல் ம∴ரிபையும் இஷாவையும் ஒன்றோடொன்று இணைத்து சேர்த்துத் தொழுவதும் ஆகுமானதாகும் என நாம் நம்புகின்றோம். இது, பல்வேறு சிரமங்களுக்கு மத்தியில் வாழக்கூடிய மனிதர்களின் நிலைமைகளைக் கருத்திற் கொண்டு, இறை தூதரால் வழங்கப் பட்ட விசேஷ அனுமதியாகும் எனவும் நம்புகின்றோம்..

ஸஹீஹ் திர்மிதியில் இப்னு அப்பாஸ் (ரழி) அவர்களிடமிருந்து இவ்வாறு அறிவிக்கப்பட்டுள்ளது: 'பயமோ, மழையோ இல்லாத சந்தர்ப்பங்களில், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், மதீனாவில் வைத்து, ளுஹர்-அஸர் தொழுகைகளையும், ம∴ரிப்-இஷா தொழுகைகளையும் சேர்த்துத் தொழுதார்கள். 'இதன்மூலம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் நோக்கமென்ன?' என்று இப்னு அப்பாஸிடம் வினவப்பட்ட போது, 'நபிகளார், தமது உம்மத்தினர் சிரமப்படாமலிருக்க வேண்டும் என்பதை நாடியுள்ளார்கள்' எனப் பதிலளித்தார்கள் (ஸுனன் திர்மிதி, பாக.1,பக்.354, பாடம் 138 மற்றும் ஸுனன் பைஹக்கீ - பாக.3, பக்.167)

சமூக வாழ்வு மிகவும் சிக்கலான இந்தக் காலகட்டத்தில் குறிப்பாக அலுவலகங்களிலும் தொழிற்சாலைகளிலும் கடமை புரியும் ஊழியர்களும் அலுவலர்களும் தமது வேலைப் பளுவின் காரணமாக தொழுகைகளை அவற்றுக்குரிய நேரங்களில் தொழ முடியாத நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். இது, நாளடைவில் அவர்கள் தொழுகையை முற்றாக விட்டு விடுவதற்குக் காரணமாக அமைந்து விடுகின்றது. எனவே, தொழுகைகளை சேர்த்துத் தொழுவதற்கு நபியவர்கள் வழங்கியுள்ள அனுமதியை நடைமுறைப் படுத்துவதனூடாக, தொழுகையைத் தவறவிடாது பேணி வரும் சந்தர்ப்பம் கிடைக்கிறது.

### 13. மண்ணில் சுஜூது செய்தல்

தொழுகையில் சுஜூது செய்யும் போது, மண் அல்லது மண்ணிலிருந்து முளைக்கின்ற ஆனால் உணவாகவோ, உடையாகவோ பயன்படுத்தப்படாத ஒன்றின் மீது

நெற்றியை வைக்க வேண்டியது அவசியமாகும் என நாம் நம்புகின்றோம். இதன் காரணமாகவே, விரிப்புகளில் சுஜூது செய்வதை ஷியாக்கள் ஜாயிஸாகக் கருதுவதில்லை. அத்துடன், சுஜூது செய்வதற்கு மிகவும் ஏற்றமுடையது மண் ஆகும். ஆகவே சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஷியாக்கள் தூய மண்ணைச் சிறிய கனியாகச் செய்து தம்மோடு வைத்துக் கொள்வர். தொழுகையின் போது அதன் மீது சுஜூது செய்வார்கள்.

இது பற்றி நபிகளாரின் பின்வரும் பொன் மொழியை ஆதாரமாகக் கொள்கிறோம்: "எனக்கு பூமி சுஜூது செய்யும் இடமாகவும் தூய்மையானதாகவும் ஆக்கப்பட்டுள்ளது." இந்த ஹதீஸில் வரும் மஸ்ஜித் எனும் பதம் சுஜூது செய்யும் தளத்தைக் குறிக்கின்றது. இந்த ஹதீஸ் அதிகமான கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளமை குறிப்பிடத் தக்கது. (புஹாரி, பாக.1, பக்.91 பாபுத் தயம்மம், நஸாயீ மண்ணின் மூலம் தயம்மம் செய்தல் எனும் பிரிவு, முஸ்னத் அஹ்மத் பாக.1, பக்.301) ஷியாக்களின் பல கிரந்தங்களும் இதனைப் பதிவு செய்துள்ளன.

சில வேளை, இந்த ஹதீஸில் மஸ்ஜித் என்பதன் பொருள் ஸஜதா செய்யும் இடமல்ல எனவும் இது தொழுகையை ஒரே இடத்தில் மாத்திரம் நிறைவேற்றும் சிலருக்கு எல்லா இடமும் தொழுகைக்கு உகந்தது எனப் போதிக்க வந்தது எனவும் சிலர் முனையலாம்.

ஆனால், பின் வந்திருக்கும் தஹூரா என்பது தயம்மம் செய்யும் மண்ணைக் குறிக்கின்றது என்பதைக் கவனிக்கின்ற போது, மஸ்ஜித் என்பதன் பொருள் ஸஜதா செய்யும் இடமென்பது தெளிவாகின்றது. அதாவது, பூமியானது தூய்மையானதும், ஸஜ்தா செய்யும் இடமும் ஆகும் என்பதைக் குறிக்கின்றது. அத்துடன் அஹ்லுல்பைத் இமாம்களின் வழியாக வந்திருக்கும் அதிகமான ஹதீஸ்களில் மண்ணில் அல்லது அது போன்ற ஒன்றில் தான் தான் சுஜூது

செய்ய வேண்டுமெனக் குறிப்பிடப்பட் டுள்ளமை போதுமான விளக்கமாகும்.

## 14. புனிதர்களின் கப்றுகளை தரிசித்தல்

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களினதும் அஹ்லுல்பைத் இமாம்கள், ஏனைய உலமாப் பெருந்தகைகள், ஞானிகள், சுஹதாக்கள், பெருந்தகைகள் போன்றோரின் கப்றுகளைத் தரிசிப்பது முஸ்தஹப்பான ஒரு செயலாகும் என நாம் நம்புகின்றோம்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் புனித கப்றைத் தரிசிப்பதன் சிறப்புகளை அறிவிக்கும் பெருந்தொகையான ஹதீஸ்கள் ஷீயா-சுன்னா கிரந்தங்களில் உள்ளன. இவையனைத்தும் தனியே ஒன்று சேர்க்கப்பட்டால், பெரும் நூலுருப் பெற்றுவிடும். அல் கதீர் கிரந்தத்தில் பாக.5, 93 முதல் 207 வரையான பக்கங்களில் 'ஸியாரத்' செய்வது பற்றிய றிவாயத்துகள் சேகரிக்கப்பட்டுள்ளன.

வரலாறு நெடுகிலும் இஸ்லாத்தின் பெரும் அறிஞர்களும் பொதுவாக எல்லாத் தரத்தையும் சேர்ந்த மக்களும் இவ்விடயத் திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து செயற்பட்டிருக்கின்றனர். மேலும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களதும் ஏனைய இறைநேசர்களதும் கப்றுகளைத் தரிசிப்பதற்காகச் சென்றவர்களின் அனுபவங்கள் பற்றிய விளக்கங்களால் கிரந்தங்கள் நிரம்பிக்காணப்படுகின்றன. மொத்தத்தில், இந்த விடயத்தில் அனைத்து முஸ்லிம்களும் ஏகோபித்த கருத்தைக் கொண்டிருக் கின்றனர்.

அதேவேளை, கப்றுகளைத் தரிசித்தல் என்பதற்கு வணங்குவது என பொருள்கொள்ளக் கூடாது. வணக்கம், அல்லாஹ்வுக்கு மாத்திரம் சொந்தமானதும் குறிப்பானதும் ஆகும். ஆனால், கப்றுகளை தரிசிப்பதன் மூலமாக இறைநேசர்களைக் கண்ணியப் படுத்துவதோடு அல்லாஹ்விடம் மன்னிப்பையும் அருளையும் பெற

அவர்களின் சிபார்சைப் பெற்றுக் கொள்வதற் கான சந்தர்ப்பத்தை அடைந்து கொள்ளவும் முடிகின்றது.

பெருமானார் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களும், பல சந்தர்ப்பங்களில் கப்றுகளைத் தரிசிப்பதற்காக, 'ஜன்னதுல் பகீஉ'க்கு அடிக்கடி வந்து போகிறவராகவும் கப்றுவாசிகளுக்கு ஸலாம் சொல்பவராகவும் இருந்தார்கள் என்பதாக ஹதீஸ்களில் அறிவிக்கப்பட்டுள்ளது. இவ்வறிவுப்புகள், முஸ்லிம், அபூதாவூத், நஸாயீ, முஸ்னத் அஹ்மத், திர்மிதி, பைஹகி போன்ற கிரந்தங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

## 15. முத்ஆ திருமணம்

இஸ்லாமிய சட்டக்கலையில் 'முத்ஆ' எனும் பெயரில் பிரபல்யம் பெற்றிருக்கும் தற்காலிக திருமணம் மார்க்கத்தில் ஆகுமான சட்டபூர்வமான ஓர் அம்சமாகும் என்பது நமது நம்பிக்கையாகும். இதன்படி திருமணம் இருவகைப்படும். ஒன்று, நிரந்தரத் திருமணம். இது, திருமண பந்தத்தின் காலம் வரையறுக்கப்படாததாகும். இரண்டு, தற்காலிக திருமணம். இதன் காலம் இரு தரப்பினரதும் அங்கீகாரத்தோடு வரையறை செய்யப் பட்டிருக்கும்.

இது தற்காலிக திருமணமாக இருந்த போதிலும், பல விடயங்களில் நிரந்தரத் திருமணத்தை ஒத்ததாகும். மஹர் கொடுத்தல், பெண்ணின் சுதந்திரம் முதலான நிபந்தனைகள் கவனிக்கப்படுவதோடு, திருமண பந்தத்திலிருந்து இருவரும் விலகிக் கொள்ளும் போது பெண் இத்தா இருப்பதும் அவசியமாகும். அத்தோடு இத்திருமணத்தின் மூலமாகப் பிறக்கின்ற குழந்தைகளின் உரிமை மற்றும் பாதுகாப்பு, பராமரிப்பு போன்றன, நிரந்தர திருமணத்தின் மூலமாகப் பிறக்கின்ற குழந்தைகளின் நிலையை விட எவ்விதத்திலும் மாறுபட்டதல்ல. ஆக, முத்ஆ என்பது அதன் அனைத்து பரிமாணங்களையும் அவதானிக்கும் போது அங்கீககரிக்கப்பட்ட ஒரு திருமண முறையே என்பது புலனாகிறது.

ஆயினும் தற்காலிகத் திருமணமானது, சில விடயங்களில் நிரந்தரத் திருமணத்திலிருந்து வித்தியாசப்படுகிறது. தற்காலிக திருமணத்தில், கணவன் மனைவிக்கு செலவு கொடுக்க வேண்டிய அவசியமில்லை. ஒருவருக்கு மற்றவரிலிருந்து வாரிசு உரிமையும் கிடையாது. எனினும், இருவர் மூலமாகவும் பிறக்கின்ற பிள்ளைகள், தமது பெற்றோரிடமிருந்து வாரிசுரிமையைப் பெற்றுக் கொள்ள முடியும். இத்திருமண முறை பற்றி அல்குர்ஆன் கூறுவதாவது:

> "நீங்கள் முத்ஆ செய்யும் பெண்களுக்கு கட்டாயமாக அவர்களது மஹரைக் கொடுத்து விடுங்கள்." *(04: 24)*

அநேகமான அல்குர்ஆன் விரிவுரையாளர்களும் ஹதீஸ் கலை வல்லுனர்களும் இவ்வசனம் முத்ஆ சம்பந்தமானதே என்பதை தெளிவாகக் குறிப்பிட்டுள்ளனர். தப்ஸீர் தபரீயில் இவ்வசனத்துடன் தொடர்பான அநேக அறிவிப்புகள் கூறப்பட்டுள்ளன. அவையனைத்தும் மேற்கூறப்பட்ட வசனம் முத்ஆ சம்பந்தமானதே என்பதை உறுதிப்படுத்துகின்றன. ஏராளமான நபித்தோழர்களும் இதனை ஆமோதித்துள்ளார்கள். (தப்ஸீர் தபரீ, பாக.5, பக்.9)

தப்ஸீர் அத்துர்ருல் மன்ஸூரிலும், சுனன் பைஹகீயிலும் இது சம்பந்தமான பல ஹதீஸ்கள் வந்துள்ளன. (அத்துர்ருல் மன்ஸூர், பாக.2, பக்.140, சுனன் பைஹகி, பாக.7, பக்.206)

மேலும், ஸஹீஹ் புஹாரி, ஸஹீஹ் முஸ்லிம், முஸ்னத் அஹமத் மற்றும் பல கிரந்தங்களிலும் இத் திருமண முறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் காலத்தில் நடைமுறையிலிருந்ததாக அறிவிக்கும் பல ஹதீஸ்கள் காணப்படு கின்றன. (முஸ்னத் அஹ்மத், பாக.4, பக்.436, ஸஹீஹ் புஹாரி, பாக.7, பக்.16, ஸஹீஹ் முஸ்லிம், பாக.2, பக்.1022 பாபு நிகாஹில் முத்ஆ) இதற்கு மாற்றமான கருத்தைத் தொனிக்கும் றிவாயத்து களும் இல்லாமல் இல்லை.

அஹ்லுஸ் சுன்னா மார்க்க சட்டநிபுணர்களில் பலர், முத்ஆ திருமணம், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது காலத்தில் இருந்ததாகவும், பின் மாற்றப்பட்டு விட்டதாகவும் நம்புகின்றனர். மேலும் பலர், இச்சட்டம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் கடைசி நாள் வரைக்கும் இருந்ததாகவும், பின் அதை இரண்டாம் கலீபா அவர்கள் மாற்றி விட்டதாகவும் கூறுகின்றனர். கலீபா அவர்கள் பின்வருமாறு கூறியதாகப் பதியப்பட்டுள்ளது:

"இரண்டு முத்ஆக்கள் நபிகளாரின் காலத்தில் இருந்தன. அவ்விரண்டையும் செய்வதை நான் தடுக்கிறேன். அவற்றை செய்வோருக்கு தண்டனையும் வழங்குவேன். அவை பெண்களின் முத்ஆவும், ஹஜ்ஜின் முத்ஆவுமாகும்."

இதே பொருளைக் கொண்டுள்ள ஹதீஸ், சுனன் பைஹகீ- பாக.7, பக்.206 இலும் குறிப்பிடப்பட்டுள்ளது. முத்ஆ, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது காலத்திலும், முதலாம் கலீபாவின் காலத்திலும், இரண்டாம் கலீபாவின் ஆட்சிக் காலத்தின் ஒரு பகுதியிலும் ஹலாலாக இருந்து நடைமுறைப் படுத்தப்பட்டு வந்ததாகவும், பின் இரண்டாம் கலீபா, தனது வாழ்நாளின் கடைசிப் பகுதியில் அதனைத் தடைசெய்ததாகவும் அறிவிக்கும் சுமார் 25 ஹதீஸ்களை, 'அல்கதீர்' கிரந்தத்தின் ஆசிரியர், அனைவராலும் ஏற்றுக் கொள்ளத்தக்க கிரந்தங்களில் இருந்து தொகுத்துள்ளார்.

(அல்கதீர்- பாக.3, பக்.332)

அஹ்லுஸ் சுன்னாக்களின் அறிஞர்களுக்கு மத்தியில், ஏனைய சட்டங்களில் போன்று இதிலும் கருத்துவேறுபாடு உள்ளது. அவர்களில் சிலர், இது நபியுடைய காலத்திலேயே மாற்றப்பட்டு விட்டதாகவும், சிலர், நபியுடைய காலத்தில் அனுமதிக்கப் பட்டிருந்து, இரண்டாம் கலீபாவின் காலத்திலேயே மாற்றப்பட்ட தாகவும் கூறுகின்றனர். இன்னும் சிறு தொகையினர், அதனை முற்றுமுழுதாக நிராகரிக்கின்றனர். பிக்ஹ் சட்டங்கள் சம்பந்தமாக இத்தகைய கருத்து

வேறுபாடுகள் பொதுவாகக் காணப்படும் ஓர் அம்சமாகும்.

அதேவேளை, ஷீயா மார்க்க அறிஞர்கள் இவ்விடயத்தில் ஏகோபித்த கருத்தைக் கொண்டுள்ளனர். அதாவது, இத்திருமண முறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது காலத்தில் அனுமதிக்கப் பட்டிருந்தது. நபியவர்கள் அதனைத் தடைசெய்யவில்லை. மார்க்கச் சட்டங்களில் ஒன்றாகிய அதனை, நபிகளாருக்குப் பின் மாற்றும் அதிகாரம் எவருக்கும் இல்லை என நாம் நம்புகின்றோம்.

இத்திருமண முறை, அதன் ஒழுங்குகளுடன் சமூகத்தில் நடைமுறைப்படுத்தப் படுமானால் அல்லது தவறாகப் பிரயோகிப் பதில் இருந்து தவிர்க்கப்படுமானால் நிரந்தரத் திருமணம் செய்வ தற்கு சக்தியற்றும், அதேவேளை உணர்ச்சிகளுக்குக் கட்டுப் பட்டும் பாவங்களில் தவறிவிழும் இளைஞர்களின் சீர்கேடுகளுக்கு சிறந்த பரிகாரமாக அமையும். அவ்வாறே வியாபாரங்களுக்காக, கல்வி கற்றலுக்காக, வேறு தேவைகளுக்காக தூர தேசங்களுக்குச் சென்று வாழ்பவர்கள், தவறுகளிலும் பாவங்களிலும் மூழ்காதிருப் பதற்கான பாதுகாப்பை இத்திருமணம் வழங்க முடியும். குறிப்பாக பல்வேறு காரணிகளின் செல்வாக்குக் காரணமாக இளைஞர் யுவதிகளின் திருமண வயது அதிகரித்துக் காணப்படும் இப்போதைய கால கட்டத்தில் இச்சைகளைத் தூண்டும் விவகாரங்களும் அதிகரித்தே உள்ளன. எனவே இதற்கான தீர்வாக இச்சட்டரீதியான திருமண முறையை அங்கீகரிக்காது விடுவதன் மூலம் ஒழுக்கக் கேடும் வேறு பல சீர்கேடுகளும் பரவலாகுவதற்கு வழிவகுக்கப் படும் என்பதில் ஐயமில்லை.

அதேவேளை, இஸ்லாம் அனுமதித்துள்ள இச்சட்டத்தை தீய வழியில் பிரயோகிப்பதையும் பெண்களை இழிவாகக் கருதுவதையும் மனோ இச்சைக்குக் கட்டுப்பட்டவர்களினால் இது மாசுபடுத்தப் படுவதையும் ஒரு போதும் அனுமதிக்க முடியாது. சிலர் தவறு செய்கின்றார்கள் என்பதற்காக, இச்சட்டத்தை

மாற்ற நினைப்பதும் குறைகூறுவதும் தவறானதாகும். எனவே, தவறு செய்பவர்களைத் திருத்த முயற்சிக்க வேண்டுமேயல்லாமல், மார்க்க சட்டத்தில் மாற்றம் கொண்டு வருவதற்கு முயலக் கூடாது என்பது நமது நிலைப்பாடாகும்.

## 16. ஷீயாக்களின் வரலாற்றுச் சுருக்கம்

ஷீயாக்களின் வரலாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களின் காலத்திலிருந்தே ஆரம்பமாகிறது என நாம் நம்பிக்கை கொண்டுள்ளோம். இதை அதிகமான ஆதாரங்கள் தெளிவுபடுத்துகின்றன. அவற்றில் சில:

> "நிச்சயமாக எவர்கள் ஈமான் கொண்டு நற்காரியங்களும் செய்தார்களோ, அவர்கள் தான் படைப்பினங்களில் மிகவும் சிறந்தவர்கள்."
> *(98: 07)*

மேற்படி திருமறை வசனத்திற்கு விரிவுரை எழுதியவர்கள், அண்ணல் நபிகளார் கூறிய ஒரு ஹதீஸை எடுத்தாள்கின்றனர். அதன் பிரகாரம், "இந்த ஆயத்தில் குறிக்கப்பட்டுள்ள மக்கள் அலீயும் அவரது நேசர்களுமே" என அன்னார் மொழிந்துள்ளார்கள். (இந்த ஹதீஸில் நேசர்கள் என மொழிபெயர்க்கப் பட்டுள்ள சொல்லுக்கு அரபு மொழியில் ஷீஆ என்ற பதமே இறை தூதரால் பிரயோகிக்கப் பட்டுள்ளது.)

மேலும் பிரசித்தி பெற்ற அல்குர்ஆன் விரிவுரையாளர்களில் ஒருவரான இமாம் சுயூதி, தனது அத்துர்ருல் மன்ஸூர் எனும் கிரந்தத்தில், இப்னு அஸாகிர் வழியாக அறிவிக்கின்றார்கள்: "ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள், 'ஒரு நாள் நாங்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது, அப்பக்கமாக ஹஸ்ரத் அலீ அலைஹிஸ் ஸலாம் வந்தார்கள். அவர்களைக் கண்டதும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் கூறினார்கள்:

'எனது உயிர் எவன் வசமிருக்கின்றதோ அவன் மீது சத்தியமாக, நிச்சயமாக இவரும், இவரது (ஷீயா)

கூட்டத்தினருமே மறுமை நாளின் வெற்றியாளர்கள்.'
அதன் பின், மேற்கூறப்பட்ட வசனம் இறங்கியது. இந்நிகழ்வுக்குப் பின்னர், ஹஸ்ரத் அலீ அவர்கள் நபிகளாரின் சபைக்கு வரும்போதெல்லாம் 'படைப்பினங்க ளில் மிகவும் சிறந்தவர் வருகின்றார்' என்றே நபித்தோழர்கள் கூறினார்கள்."

(அத்துர்ருல் மன்ஸூர் - பாக 6 - பக் 379)

இதே கருத்தை இப்னு அப்பாஸ் (ரழி), அபூபர்சஹ், இப்னு மர்தவிய்யா, அதிய்யா அவ்பி போன்றோர் சிறு வித்தியாசத் துடன் அறிவித்துள்ளனர்.

இதன் படி, ஷீயா எனும் பெயரை இமாம் அலீயுடன் தொடர்பு பட்டவர்களுக்கு சூட்டுவது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது காலத்திலிருந்தே தோன்றி வழக்கில் இருந்து வந்துள்ளது என்பதை அறிய முடிகின்றது. நபியவர்களே இப்பெயரைச் சூட்டியுள்ளார்கள் என்பது இதன் மற்றொரு சிறப்பாகும். மாறாக, இது கலீபாக்களின் காலத்திலோ, சபவிய்யாக்களின் காலத்திலோ உருவானதல்ல.

இமாம் அலீயைப் பின்பற்றுபவர்களுக்கு சில சிறப்பியல்புகள் இருக்கின்றன. இமாம் அலீ, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களது விசேட கண்காணிப்பின் கீழிருந்தமையே இதற்குக் காரணமாகும்.

ஷீயாக்களை எதிர்க்கும் சிலர், அப்துல்லாஹ் இப்னு சபா எனும் ஒருவருடன் இந்த மத்ஹபைத் தொடர்பு படுத்துவதற்கு முனைகின்றனர். அடிப்படையில் யஹூதியாக இருந்து பின்னர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட அப்துல்லாஹ் இப்னு சபா என்பவரையே ஷீயாக்கள் பின்பற்றுவதாகக் கூறுவார்கள். இது மிகவும் வியப்புக்குரிய ஒரு கருத்தாகும். ஷீயாக்களின் அனைத்து கிரந்தங் களையும் ஆய்வுசெய்கின்ற போது, அவர்கள் இப்னு சபாவுடன் எவ்வகையிலும் தொடர்புபட்டவர்களல்ல என்பதை அறிய முடியும். அத்துடன், ஷீயாக்களின் றிஜால் சம்பந்தப்பட்ட எல்லா நூற்களும் (குத்புர் ரிஜால்), அப்துல்லாஹ் இப்னு சபா என்பவரை வழிகெட்ட மனிதரெனக் குறிப்பிடுகின்றன.

சில அறிவிப்புகளின் பிரகாரம் இமாம் அலீ அலைஹிஸ் ஸலாம், அவன் முர்தத் என்பதால் அவனைக் கொல்லுமாறு கட்டளையிட்டதாக குறிப்பிடப்படுகின்றது.

அத்தோடு, வரலாற்றில் அப்துல்லாஹ் இப்னு ஸபா பற்றிய தகவல்கள் நூறு வீதம் சந்தேகத்துக்கிடமானவையாகவே உள்ளன. சில ஆய்வாளர்களின் ஆய்வு முடிகளின் படி இப்னு சபா என்பவர் வெறுமனே கட்டுக் கதைப் பாத்திரம் ஆவார். அல்லாமா அஸ்கரீ யாத்துள்ள 'அப்துல்லாஹ் இப்னு ஸபா' பற்றிய ஆய்வு நூலில், யதார்த்தத்தில் அப்படி ஒருவர் உயிர் வாழவில்லை என்பதை சந்தேகத்துக்கிடமின்றி நிறுவியுள்ளார். அவன் ஒரு கற்பனை மனிதன் என்பதை ஏற்றுக் கொள்ளாவிட்டால் குறைந்தது ஏனைய ஆய்வாளர்களின் படி அவன் வழிகெட்ட ஒருவனாவான். நாமே மறுத்துரைக்கும் ஒருவர் நமது மத்ஹபை உருவாக்கினார் எனக் கதை கூறுவது எவ்வளவு அபத்தமானது.

## 17. ஷீயா மத்ஹபின் பரம்பல்

ஷீயாக்களின் மத்திய தளமாக ஈரான் இருக்கவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. இஸ்லாத்தின் ஆரம்ப நூற்றாண்டில், பல மத்திய இடங்களை அது கொண்டிருந்தது. அவற்றில் கூபா, எமன், மதீனா என்பவை முக்கியமானவை. சிரியாவில் ஹாசிமீக்களுக்கு எதிரான உமையாக்களின் கடுமையான பிரசாரம் காணப் பட்ட போதிலும் அங்கும் பல மத்திய நிலையங்கள் காணப்பட்டன. எவ்வாறிருப்பினும் ஷீயாக்களின் பரம்பல் ஈராக் தேசத்தில் இருந்ததை விட அதிகமாக வேறு எங்கும் காணப்படவில்லை.

பரந்து விரிந்த எகிப்திலும் ஷீயாக்களின் ஒரு குழுவினர் எப்போதும் இருந்து வந்தனர். பாத்திமீக்களின் கிலாபத் இடம்பெற்ற காலத்தில் ஷீயா பாரம்பரியங்களைப் பின்பற்றுகின்ற ஒருவரது கையிலே தான் ஆட்சியதிகாரம் கூட இருந்து வந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

உமையாக்களுடைய ஆட்சியில், சிரியாவில் வாழ்ந்த ஷீயாக்கள் சொல்லொணாத கொடுமை களுக்கும்

அடக்குமுறைகளுக்கும் உள்ளாக்கப்பட்டனர். அப்பாசியரு டைய ஆட்சியிலும் இந்நிலையே தொடர்ந்தது. அதிகமானோர் சிறைச்சாலைகளில் தமது உயிர்களை இழந்து ஷஹீதுகளாயினர். சிலர், இக்கொடுமை களிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக கிழக்குத் திசை நோக்கிச் சென்றனர். மேற்குத் திசையில் எகிப்துப் பக்கமாகச் சென்றோரில் இத்ரீஸ் இப்னு அப்தில்லாஹ் இப்னு ஹஸன் குறிப்பிடத்தக்க வராவார். பின் அங்கிருந்து அவர் மொரோக்கோவிற்குச் சென்றார். மொரோக்கோவிலிருந்த ஷீயாக்களின் உதவியுடன் அங்கு அவர் உருவாக்கிய அரசாட்சி 'இத்ரீஸீகளின் ஆட்சி' என வழங்கப்பட்டது. இது ஹிஜ்ரி 2ம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியிலிருந்து, ஹிஜ்ரி 4ம் நூற்றாண்டின் கடைசி வரை நீடித்திருந்தது.

எகிப்திலிருந்த ஷீயாக்கள், பாத்திமா நாயகியின் மகனான இமாம் ஹுஸைனின் வழித் தோன்றல்களாவர். எகிப்தில் ஷீயாக்களுக்கென பிரத்தியேக அமைப்பொன்று இருக்க வேண்டுமென்ற மக்களது ஏகோபித்த கருத்தினடிப்படையில் ஹிஜ்ரி 4ம் நூற்றாண் டில் உத்தியோக பூர்வமாக பாத்திமீக்களின் ஆட்சியை உருவாக் கினர். கெய்ரோ நகரத்தையும் அவர்களே நிர்மாணித்தனர். பாத்திமி கலீபாக்கள் மொத்தமாக 14 நபர்களாவர். அவர்களில் பத்துப் பேர் எகிப்தில் ஆட்சி செலுத்தினர். சுமார் மூன்று நூற்றாண்டுகள் எகிப்திலும் ஆபிரிக்காவின் ஏனைய பகுதிகளிலும் ஆட்சி புரிந்துள்ளனர். அல்அஸ்ஹர் பள்ளிவாசலும் அல்அஸ்ஹர் பல்கலைக்கழகமும் அவர்கள் மூலமாகவே நிர்மாணிக்கப் பட்டன. (தாயிரத்துல் மஆரிப் - தெஹ்ஹொராதா - தாயிரத்துல் மஆரிப் - பரீத் வுஜ்தீ)

தற்காலத்தில் உலகின் பல பாகங்களிலும் ஷீயாக்கள் வாழ்ந்து வருகின்றனர். சவூதி அரேபியாவின் கிழக்கு மாகாணத்திலும் அதிகமான ஷீயாக்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். ஏனைய மத்ஹபுகளைக் சேர்ந்தோருடன் சுமுகமான உறவு அங்கு காணப்படுகின்றது.

முஸ்லிம்களின் விரோதிகள், ஷீயாக்களுக்கும் ஏனைய மதஹபுகளைச் சேர்ந்த சகோதரர்களுக்கு

மிடையே பிரிவினையை ஏற்படுத்தி, அவர்கள் மத்தியில் குரோதம், கலவரம் என்பவற்றைத் தூண்டி அதன் மூலம் முஸ்லிம்களைப் பலவீனப்படுத்தவும், முஸ்லிம்களது பலவீனத்தில் தம்மைப் பலப்படுத்திக் கொள்ளவும் முனைந்து வருகின்றனர்.

குறிப்பாக நமது யுகத்தில் இஸ்லாம், கீழைத்தேய-மேலைத்தேய பேராதிக்கங்களுக்கு முன்னால் மாபெரும் சக்தியாக வளர்ந்து சக்தி பெற்று வருகின்றது. சடவாத அமைப்புகளிடம் நிராசை யுற்றிருக்கும் மக்களைத் தன் பக்கம் ஈர்த்தெடுக்கின்றது. முஸ்லிம்களின் சக்தியையும் இஸ்லாத்தின் வேகப் பரம்பலையும் கண்டு அச்சமுறும் எதிரிகள், முஸ்லிம்களிடையே மத்ஹப் ரீதியான பிரச்சினைகளை உருவாக்கி, அதன் மூலம் அவர்களைப் பிளவு படுத்தி விட முனைகின்றனர்.

எனவே, அனைத்து இஸ்லாமிய மத்ஹபுகளை யும் பின்பற்றக் கூடியவர்கள், இது பற்றிய விழிப்புணர்ச் சியுடனும் தூரதிருஷ்டியுடனும் செயற்பட்டால் பயங்கர மான விளைவுகளைத் தரும் இச்சதிகளை முறியடிக்க முடியும்.

ஷீயாக்கள் மத்தியிலும் அஹ்லுஸ் ஸுன்னாக்கள் மத்தியில் காணப்படுவது போன்று பல பிரிவுகள் காணப்படுகின்றன. பன்னிரண்டு இமாம்களைப் பின்பற்றக் கூடிய 'இஸ்னாஅஷரிய்யாக்கள்' என அழைக்கப் படுவோரே அதிகமாகக் காணப்படுகின்றனர். உலக முஸ்லிம்களின் மொத்த தொகையில் நான்கிலொரு பகுதியாக ஷீயாக்கள் இருக்கின்றமை குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

## 18. ஹதீஸ் கிரந்தங்கள்

அஹ்லுல் பைத்துகளைப் பின்பற்றக் கூடியவர்கள், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள் கூறிய அதிகமான ஹதீஸ்களை இமாம்களின் மூலமாக அறிவித்துள்ளனர். அதே போல் ஹஸ்ரத் அலீ அலைஹிஸ்ஸலாம் அவர்களிடமிருந்தும், ஏனைய இமாம்களிடமிருந்தும் கூடுதலான ஹதீஸ்களை அறிவித்துள்ளனர். அவை, ஷீயாக்களின் மார்க்க சட்டத்தைத் தொகுப்பதற்கான அடிப்படை மூலாதாரங் களாக விளங்குகின்றன.

'குதுபுல் அர்பஆ' எனப்படும் நான்கு கிரந்தங்கள் அவற்றில் முக்கியமானவை. அவையாவன, அல் கா.ஃபீ, மன் லா யஹ்ளுருஹுல் பகீஹ், தஹ்தீப், இஸ்திப்ஸார் ஆகியவை யாகும். இவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள ஹதீஸ்கள் ஒவ்வொன்றின தும் ஏற்றுக் கொள்ளும் தன்மை அவற்றினது அறிவிப்பாளர்களின் வரலாற்றை யும் வாழ்வையும் ஆதாரமாகக் கொண்டே தர நிர்ணயம் செய்யப்படுகின்றமை குறிப்பிடத்தக்கது. அறிவிப்பாளரது வாழ்க்கை மார்க்கத்துடன் முரண்படாததாகவும் ஒழுக்கம் மிக்கதாக வும் இருக்கும் பட்சத்தில் குறித்த ஹதீஸ் நமபத் தகுந்தது (ஸஹீஹ்) எனவும் இல்லையெனில் மஷ்கூக் (சந்தேகத்திற்குரியது), ழஈப் (பலவீனமானது) எனவும் தீர்மானிக்கப்படும். றிஜால் பற்றிய கிரந்தங்களில் ஹதீஸ் அறிவிப்பாளர்கள் பற்றிய விளக்கங்கள் காணப்படுகின்றன.

ஷீயாக்களது கிரந்தங்களுக்கும் சுன்னாக்களது கிரந்தங் களுக்குமிடையே சில வித்தியாசங்கள் உள்ளன. புஹாரி, முஸ்லிம் போன்ற கிரந்தங்களைத் தொகுத்தவர்கள் ஸஹீஹானவை எனத் தரப்படுத்தப் பட்டவற்றையே கோர்வை செய்தார்கள். அதனால் அவற்றில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு ஹதீஸையுமே அஹ்லுஸ் சுன்னாக்களின் கொள்கையை விளங்கிக் கொள்வதற்குப் பயன் படுத்த முடியும். (மேலதிக விபரங்களுக்கு ஸஹீஹ் முஸ்லிம், பத்ஹுல்பாரீ ஃபீ ஷரஹில் புஹாரீ முன்னுரையைப் பார்க்கவும்)

ஆனால், ஷீயாக்களைப் பொறுத்தவரை, பொதுவாக அஹ்லுல் பைத் பாரம்பரியத்துடன் சம்பந்தப்பட்ட றிவாயத்துகளை முதலில் கிரந்தங்களில் கோர்வை செய்துள்ளனர். அவற்றில் சரியானவற்றையும், பலவீனமானவற்றையும் அறிவதை இல்முர் ரிஜால் (ஹதீஸ் அறிவிப்பாளர்களின் நிலைகளை அறிவதற்கான அறிவு) பற்றிய அறிஞர்களிடம் ஒப்படைத்துள்ளனர்.

## 19. இரு பெரும் கிரந்தங்கள்

ஷீயாக்களின் பாரம்பரியத்தைப் பறைசாற்றும் இரண்டு முக்கிய கிரந்தங்கள் உள்ளன. இமாம் அலீ அலைஹிஸ் ஸலாம் அவர்களின் பொன்மொழிகள் அடங்கிய நஹ்ஜுல்

பலாகா முதலா வதாகும். சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், மர்ஹூம் சரீப் ரிழா என்பவரால் தொகுக்கப்பட்ட இக்கிரந்தம், இமாம் அலீயின் குத்பாக்கள், கடிதங்கள், பொன்மொழிகள் என மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. உயர் இலக்கண இலக்கிய நெறிகளுடனும் அழகிய சொல்லமைப்புகளுடனும் அமைந்துள்ள இமாம் அலீயின் இப்பொன்மொழிப் பேழை, அதை வாசிப்போர் எம்மதத் தையும் எந்த மத்ஹபையும் சேர்ந்தவராக இருப்பினும் அவர்களில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தும் அளவுக்கு கருத்தாழமிக்கதாகக் காணப்படுகின்றது. ஏகத்துவம், இம்மை-மறுமை, நல்லொழுக்கம், அரசியல், சமூகவியல் என பல்வேறு விடயங்கள் தொடர்பான தெளிவான கருத்துகளை அது உலகுக்கு வழங்குகின்றது. முஸ்லிம்கள் மட்டுமன்றி, ஏனைய மதத்தவர்களும் படித்துப் பயன்பெறும் அற்புதக் கருத்துகளை அது கொண்டிருக்கின்றது.

நஹ்ஜுல் பலாகாவை அடுத்து, முக்கியத்துவம் பெறும் கிரந்தம், ஷீயாக்களின் நான்காவது இமாமான இமாம் அலீ இப்னு ஹுஸைன் அஸ்ஸஜ்ஜாத் செய்னுல் ஆபிதீன் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் துஆத் தொகுப்பான, 'சஹீபதுஸ் ஸஜ்ஜாதிய்யா' ஆகும். இது, சிறந்த கருத்தாழமிக்க துஆக்களின் தொகுப்பாகும். உண்மையில், இது நஹ்ஜுல் பலாகாவில் இருக்கும் குத்பாக்களின் பாணியையே வேறொரு விதத்தில் தெளிவுபடுத்துகின்றது. அதன் ஒவ்வொரு வசனமும் மனிதர்களுக்குப் புதிய கருத்துகளை அறிமுகப் படுத்துகின்றது. அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யும் முறை, அல்லாஹ்வுடன் முனாஜாத் செய்யும் ஒழுங்கு என்பவற்றையும் கற்றுத் தருகின்றது. அதிலுள்ள துஆக்கள், உடலுக்கும் உள்ளத்துக்கும் புத்துணர்ச்சியை யும், ஆரோக்கியத்தையும் வழங்கக் கூடிய சிறப்பியல்பு கொண்டவையாக அமைந்துள்ளமை அதன் முக்கிய சிறப்பம்சமாகும்.

ஷீயாக்களின் அதிகளவிலான ஹதீஸ்கள், ஐந்தாம், ஆறாம் இமாம்களான இமாம் பாக்கிர் அலைஹிஸ் ஸலாம், இமாம் ஜஃபர் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் ஆகியோர் வழியாகவும் எட்டாவது இமாமான இமாம்

ரிழா அலைஹிஸ் ஸலாம் அவர்கள் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளன. இவர்களது காலத்திலேயே, உமையாக்களதும், அப்பாசியர்களதும் கொடுமைகள் ஓரளவு தணிந்திருந்தன. இதனால், ஒப்பீட்டளவில் சுதந்திரமாகவும் பகிரங்கமாகவும் செயற்படுவது இவர்களுக்குச் சாத்திய மாயிற்று.

இமாம் ஜ∴பர் ஸாதிக் அலைஹிஸ் ஸலாம் அவர்களிடமிருந்தே அதிகமான ஹதீஸ்கள் அறிவிக்கப் பட்டுள்ளமையால், ஷீயாக்களின் மத்ஹப், ஜ∴பரியா மத்ஹப் என்று அழைக்கப்படுகின்றது. இமாமவர்கள், அபூஹனீபா, மாலிக் உட்பட சுமார் நான்காயிரத்துக்கும் அதிகமான மாணவர்களுக்கு ஹதீஸ், பிக்ஹ், மற்றும் பல பாட போதனைகளை நிகழ்த்தியுள்ளார்கள்.

இமாம் ஜ∴பர் ஸாதிக் 'அலைஹிஸ் ஸலாம் அவர்களைப் பற்றி, ஹனபி மத்ஹபின் ஸ்தாபகர் இமாம் அபூஹனீபா அவர்கள் குறிப்பிடுவதாவது:

"ஜ∴பர் இப்னு முஹம்மத் -அலைஹிஸ்ஸலாம்- அவர்களை விட சிறந்த மார்க்க சட்டமேதை எவரையும் நான் கண்டதில்லை."

(தத்கிரதுல் ஹுப்பாழ், பாக.1, பக்.166)

மாலிகீ மத்ஹபைத் தோற்றுவித்த இமாம் மாலிக் இப்னு அனஸ் அவர்கள் குறிப்பிட்டார்கள், "நான் சிறிது காலம் இமாம் ஜ∴பர் இப்னு முஹம்மத் அஸ்ஸாதிக் (அலைஹிஸ் ஸலாம்) அவர்களிடம் அடிக்கடி சென்று வந்தேன். நான் செல்லும் போதெல்லாம் அவர்கள் தொழுது கொண்டிருப்பார் அல்லது நோன்பாளியாக இருப்பார் அல்லது குர்ஆன் ஓதிக் கொண்டிருப்பார். இம்மூன்றுமல்லாத வேறொரு நிலையில் நான் அவர்களைக் காணவில்லை. இமாமவர்களை விட அறிவிலும் வணக்கத்திலும் உயர்ந்த ஒருவரை எவரும் கண்டிருக்கவோ கேள்விப்பட்டிருக்கவோ மாட்டார்கள்."

(தஹ்தீபுத் தஹ்தீப், பாக.2, பக்.104)

இது சிறியதொரு தொகுப்பாக இருப்பதால், ஏனைய இமாம்களைப் பற்றிய இஸ்லாமிய அறிஞர்களின் கூற்றுக்களைக் குறிப்பிடுவதைத் தவிர்ந்து கொள்கின்றோம்.

## 20. அறிவுத்துறை வளர்ச்சியில் ஷீயாக்களின் பங்கு

இஸ்லாமிய அறிவுத் துறை வளர்ச்சிக்கு ஷீயாக்கள் அளப்பரிய தொண்டாற்றியுள்ளனர். இஸ்லாமிய அறிவு வளர்ச்சிக்கு, ஷீயாக்களிடமிருந்தே பாரிய பங்களிப்பு வழங்கப் பட்டது எனக் கூறுவோரும் உள்ளனர். இதை நிருபிக்கும் பல ஆய்வு நூற்களை எழுதியுமுள்ளனர். எவ்வாறாயினும் அறிவுத்துறை வளர்ச்சியின் தோற்றத்தில் ஷீயாக்கள் முக்கிய பங்கு வகித்தார்கள் என்பது உண்மையாகும்.

இஸ்லாமிய அறிவு, மற்றும் இஸ்லாமிய கலைகள் தொடர்பாக ஷீயா அறிஞர்களால் எழுதப்பட்டுள்ள பெருந்தொகையான நூற்கள், இதற்கு சிறந்த சான்றாக விளங்குகின்றன. இவை, பிக்ஹு, தப்ஸீர், உசூல், உலூமுல் குர்ஆன், இல்முல் கலாம் உள்ளிட்ட பல துறைகளையும் உள்ளடக்கிக் காணப்படுகின்றன. இவற்றில் அதிகமானவை, இன்றும் உலகின் பல வாசிகசாலைகளில் ஆய்வுக்கும் வாசிப்புக்குமென பாதுகாத்து வைக்கப் பட்டுள்ளன.

ஷீயா அறிஞர்களால் எழுதப்பட்ட அனைத்து நூற்களின் பெயர்களையும் அட்டவணைப்படுத்தி 'அல் தரீஆ இலா தஸானீபிஷ் ஷீஆ' எனும் பெயரில் கோர்வை செய்து வைக்கப்பட்டுள்ளது. இதில் சுமார் 68 ஆயிரம் கிரந்தங்கள் பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளது. 26 பாகங்களில் வெளிவந்துள்ள இந்நூலை ஆகா புஸுர்க் தெஹ்ரானீ எனும் பிரபல்யமான ஷீயா அறிஞர் தொகுத்துள்ளார். இவ்வட்டவணை முந்திய பத்தாண்டு வரை உரியதாகும். அக்காலப்பகுதிக்குரிய அச்சுநூற்கள் மாத்திரமன்றி, கையேட்டுப் பிரதிகளும் தொகுக்கப்பட்டு, அவை தற்போது அச்சுருப் பெற்றுக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இன்றும் இப்பணி பாரியளவில் தொடர்ச்சியாகமுன்னெடுக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றது.

## 21. உண்மையும் நம்பிக்கையும்

உண்மை, நம்பிக்கை என்பன இஸ்லாத்தின் முக்கிய தூண்களாகும்.

> "அல்லாஹ் கூறுகின்றான், இது உண்மையாளர் களுக்கு அவர்களது உண்மை, பயனளிக்கக் கூடிய நாளாகும்." *(05:119)*

அல்குர்ஆன் வசனங்களில், மறுமை நாளில் கொடுக்கப் படும் அடிப்படைப் பயன்பாடு அவர்களது உண்மைச் செயலுக்கான கூலியாகும் என்ற கருத்து குறிப்பிடப்படுகின்றது. அதாவது, ஈமான், அல்லாஹ்வுடன் செய்து கொண்ட உடன்படிக்கை உட்பட, வாழ்வின் அனைத்து நிலைகளிலும் உண்மையைப் பேணி வருவது இன்றியமையாததாகும்.

> "உண்மையாளர்களுக்கு, அவர்களது உண்மை யின் காரணத்தால் அல்லாஹ் நற்கூலி வழங்குகிறான்." *(33:24)*

எனவே, மேற்குறிப்பிடப்பட்டது போன்று, முஸ்லிம்கள் தமது வாழ்நாள் முழுவதும், பாவங்களை விட்டு தூய்மையானவர்களுடனும் உண்மையாளர்க ளுடனும் இருப்பது அவசியமாகும்.

> "ஈமான் கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ் வைப் பயந்து கொள்ளுங்கள். இன்னும் உண்மையாளர்களுடன் ஆகிவிடுங்கள்." *(09:119)*

எந்த ஒரு விடயத்தையும் உண்மையைக் கொண்டே நுழைந்து, உண்மையைக் கொண்டே வெளியேறுமாறு அல்லாஹ் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்களுக்குப் பணிப்பதிலிருந்து, உண்மையின் முக்கியத்துவம் தெளிவாகின்றது.

> "என் இறைவனே! என்னை உண்மையின் பிரவேசமாக பிரவேசிக்க வைப்பாயாக. இன்னும் உண்மையான வெளியேற்றுதலாக என்னை வெளியேற்றி வைப்பாயாக என்று (நபியே!) நீர் கூறுவீராக." *(17:80)*

அல்லாஹ்வின் புறமிருந்து எந்தவொரு நபியும் தனது அடிப்படைப் பணியில் உண்மை, நம்பிக்கை இல்லாது அனுப்பப் படவில்லை.

"வாக்கில் உண்மை, நல்லவர் கெட்டவர் வேறுபாடின்றி நாணயமாக நடத்தல் என்பவை இல்லாமல் எந்த நபியையும் அல்லாஹ் அனுப்ப வில்லை." (பிஹார், பாக.2, பக்.104)

இவையனைத்தும் அல்லாஹ்வின் புனித வேதமான அல்குர்ஆனும், பெருமானாரதும் அவர்களது வழிவந்த இமாம்களதும் வழிமுறைகளும் எடுத்துரைக்கும் முக்கிய அம்சங்களாகும். இவற்றைப் பின்பற்றுவதிலும், பிறருக்குச் சொல்லிக் கொடுப்பதிலும், அல்லாஹ் ஈருலக வெற்றியை நிர்ணயித்து வைத்துள்ளான்.

## முடிவாக..

இச்சிறு நூலில், அஹ்லுல் பைத்துகளைப் பின்பற்றக் கூடிய ஷீயாக்கள் பற்றிய தகவல்களும், அவர்களது கொள்கைகள், நடைமுறைகள் என்பனவும் எவ்வித ஒளிவு மறைவுமின்றி மிகச் சுருக்கமாக தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. அவற்றுக்கு ஆதாரமாக, அல்குர்ஆன் வசனங்களும் பெருமானாரதும் இமாம்களதும் ஹதீஸ்களும், முஸ்லிம் அறிஞர்களின் நூற்களும் சுட்டிக்காட்டப் பட்டுள்ளன. இத்தொகுப்பின் மூலமாக கீழ்க் காணும் பெறுபேறுகள் கிடைக்கும் என நாம் நம்புகின்றோம்.

1. முஸ்லிம்களும் முஸ்லிம் அல்லாதவரும் இதனை வாசிப் பதன் மூலம் ஷீயாக்களின் உண்மையான கொள்கையை அறிந்து கொள்ள முடியும் என நம்புகின்றோம்.

2. இது, ஷீயாக்களைப் பற்றிய தெளிவான அறிவில்லாது அவர்களைப் பற்றி தவறான அபிப்பிராயம் கொண்டுள்ளவர்களுக்கும் ஷீயாக்களைப் பற்றிய தகவல்களை அவர்களது எதிரிகளிடமிருந்து பெற்றுக் கொண்டவர்களுக்கும் ஷீயாக்களைப் பற்றிய உண்மையை அறிந்து கொள்வதற்கான தெளிவான வழிகாட்டியாக அமையும் என நம்புகிறோம்.

3. அஹ்லுல்பைத்தைப் பின்பற்றுபவர்களுக்கும் ஏனைய மத்ஹபுகளைப் பின்பற்றுபவர்களுக்கும் இடையே காணப்படும் கருத்தொற்றுமை அவர்களிடை யேயான ஒற்றுமைக்கு மேலும் ஒரு தூண்டுகோலாக விளங்க முடியும். ஏனெனில், மத்ஹபுகள் பல இருப்பினும், அவற்றுக்கிடையிலான வேறுபாடுகள் சொற்பமாகவும் ஒற்றுமைகளே அதிகமாகவும் காணப் படுகின்றன.

4. அனைத்து மத்ஹபுகளைச் சேர்ந்த அறிஞர்களும் ஒன்றிணைந்து கூட்டாக ஆய்வுகளை மேற்கொண்டால், முஸ்லிம்களிடையேயுள்ள இச்சிறு வேறுபாடுகளை அகற்றிவிட முடியும். அல்லது வேறுபாடுகளைக் குறைத்துக் கொள்ள முடியும். இதன் மூலம் முஸ்லிம்களது பிளவை நீக்கி, ஒற்றுமையை அவர்களிடையே கட்டியெழுப்பலாம். ஈரானில் ஸாஹிதான் நகரில் கடந்த காலங்களில் இத்தகைய பல முயற்சிகள் நடைபெற்றன. ஷீயா மற்றும் ஸுன்னி உலமாக்கள் தமக்கிடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகள் பற்றி ஆய்வு நடாத்தினர். அவர்களது நல்லுறவுக்கு அது பெருந்துணையாக அமைந்தமை குறிப்பிடத்தக்கது.

எமது ரட்சகா, நமக்கும் நமக்கு முன் சென்ற ஈமானிய சகோதரர்களுக்கும் உன் மன்னிப்பை அள்ளி வழங்குவாயாக. விசுவாசிகள் பற்றி நம் மனதில் கசடு ஏற்படாமல் பாதுகாப்பாயாக. ரட்சகா, நீயோ மிக்க கருணையுள்ளோனும் இரக்கமுள்ளோனும் அல்லவா.

முற்றும்.